ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீவரவர முநயே நம:
ஸ்ரீவானாசல முநயே நம:



# ஸ்ரீ வானமாமலை மடம் தோற்றமும், வளர்ச்சியும்




டாக்டர். செ. லக்ஷ்மீநாராயணன்
எம்.ஏ.,பி.எச்.டி.
பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்,
ஸ்ரீ பரமகல்யாணி கல்லூரி,
ஆழ்வார்குறிச்சி-627412



ஸ்ரீ வானமாமலை மடம்,
நான்குனேரி,
திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டம்.

ஸ்ரீ:

    



28-வது பட்டம்

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி

சடகோப ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி

ஸ்ரீ:

    



29-வது பட்டம்:

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி

ஸ்ரீபட்டர்பிரான் ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீவரவர முநயே நம:

ஸ்ரீவானாசல முநயே நம:



# ஸ்ரீ வானமாமலை மடம் தோற்றமும் வளர்ச்சியும்




டாக்டர். செ. லக்ஷ்மிநாராயணன்

எம.ஏ., பி.எச்.டி.

பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்,

ஸ்ரீ பரமகல்யாணி கல்லூரி,

ஆழ்வார்குறிச்சி-627412.


---


ஸ்ரீ வானமாமலை மடம்,

நான்குனேரி,

திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டம்.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீவரவர முநயே நம:

ஸ்ரீவாநாசல முநயே நம:



# முன்னுரை

சென்ற ஜூலை மாதம் (1989) அடியேனுடைய ஆசார்யஸ்வாமி பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ பட்டர்பிரான் ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி அவர்களைச் சேவிக்க அடியேன் சென்ற போது. பெரிய ஸ்வாமி பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ சின்ன சடகோப ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியை முதலில் தண்டம் ஸமர்ப்பித்தேன். அப்பொழுது ஸ்ரீ பெரிய ஸ்வாமி திருமேனியில் நோவு சாத்திக் கொண்டு மிகவும் அசக்தராக எழுந்தருளி இருந்தார்கள். மிகவும் தளர்ந்த நிலையில் இருந்தாலும் அவருடைய முகத்தில் ஒளிததும்ப கம்பீரமாக அடியேனுடன் உரையாடல் நிகழ்த்தினார்கள் அவர்களும், அவர்களுக்கு முன்பிருந்த இருபத்தேழு ஜீயர் ஸ்வாமிகளும், வைணவ சம்பிரதாயத்திற்கும், வைணவக் கோவில் திருப்பணிகளுக்கும், ஸ்ரீ ராமாநுஜ தர்சன வெற்றிக்கும் ஆற்றிய நீண்ட பணிகள் அடியேனுடைய மனக்கண்ணில் விரிந்தன.

ஸ்ரீ பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ சின்ன சடகோப ராமாநுஜ ஸ்வாமி திருநாடு அலங்கரித்தவுடன் வர்த்தமான ஸ்ரீ பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ பட்டர்பிரான் ஜீயர் ஸ்வாமி அவர்களுடைய பட்டாபிஷேக விழாவில் (27-8-89) அடியேனும் கலந்து கொள்ளும் அதிர்ஷ்டம் கிடைத்தது.

ஸ்ரீ வானமாமலை மடத்துக் குரு பரம்பரையினர் வைணவ சமயத்துக்கும் ஸ்ரீ ராமாநுஜ தர்சனத்திற்கும் ஆற்றிய பணிகளை ஒரு சிறிய நூலாகத் தொகுத்து எழுத வேணும் என்ற அவாவை அடியேனால் இயன்ற வரை

நிறைவு செய்வது என்று ஸ்ரீவரமங்கா ஸமேத ஸ்ரீதெய்வ நாயகப் பெருமாளிடம் விண்ணப்பித்துக்கொண்டேன்.

அடியேனுடைய தகுதியை நினைக்கும் போது தளர்வுற்றாலும் ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமியின் அநுக்ரஹமும் ஸ்ரீ எம்பெருமாநுடைய க்ருபையும் அடியேனை உற்சாகப் படுத்த இத்துறையில் காலடி எடுத்து வைத்தேன்.

என்னுடைய உறவினரும், ஸ்ரீ மடத்தின் நிர்வாகி யுமான (ஏஜன்ட்) ஸ்ரீ-உ-வே அப்பாழ்வார் அய்யங்கார் ஸ்வாமி வானமாமலை மடத்தைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளை ஆங்கிலத்திலும், தமிழிலும் வைத்து இருந்தார்கள். அடியேனுடைய வேண்டுதலுக்கிசைந்து அவர்கள் அத்தனையையும் கொடுத்துதவினார்கள்.

ஸ்ரீ வானமாமலை மடத்து வெளியீடுகளான ''ககநகிரி முநி குருபரம்பரா ப்ரபாவம்'' என்ற நூலும் ''ஸ்ரீதோதாத்திரி மான்மியம்'' என்ற நூலும், மதுரையில் உள்ள மதுரைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் ஸ்ரீ-உ-வே அரங்கராஜ அய்யங்கார் ஸ்வாமி அவர்களுடைய ''ஸ்ரீ வானமாமலை ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி வைபவம்'' என்ற நூலும் இந்தச் சிறிய நூலை உருவாக்க உதவின. சில இடங்களில் இந்த நூலுக்குள் படிப்பவர்கள் தடை யில்லாமல் படிப்பதற்காக மேற்குறித்த நூலாசிரியர்களின் கருத்தையும், நடையையும், வாக்கியங்களையும் அப்படியே பயன்படுத்தியுள்ளேன்.

மேற்குறித்த நூலாசிரியர்களுக்கும் ஸ்ரீ அப்பாழ்வார் அய்யங்கார் ஸ்வாமிக்கும் ''என் தலையல்லால் கைம்மாறில்லை''

அடியேனையும் ஒரு பொருட்டாகக் கருதித் திருத்திப் பணி கொண்ட அடியேனுடைய ஆசார்யன் வர்த்தமான ஜீயர் ஸ்வாமி ஸ்ரீ பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ பட்டர்பிரான் ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி அவர்களுடைய பொன்னார் திருவடித் தாமரைகளைத் தொழுது அவர்களுடைய காரேய் கருணை நோக்கில் உருவான இந்த நூலை அவர்களுடைய திருவடியில் ஸமர்ப்பிக்கிறேன்.

செ. லக்ஷ்மீநாராயண ராமாநுஜதாஸன்

ஸ்ரீ:

# ஸ்ரீ வானமாமலை மடம் தோற்றமும் வளர்ச்சியும்

## முன்னுரை:

உலக அமைதிக்கும் நிலையான வாழ்வுக்கும் இந்தியா பலவகைகளில் உதவி வருகிறது. அதிலும் ஆன்மீக முன்னேற்றத்திற்கும், இறைவனுக்கும் ஆன்மா விற்கும் இருக்கிற தொடர்பு பற்றிய ஞான வளர்ச்சிக்கும் தென்னிந்தியா இடையறாது முயன்று வருகிறது. இவ் வகை முயற்சிகளுக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து, இவ் வகை முயற்சிகள் நிலை பெறத் தமிழ்நாடு பலவகையில் தன்னைத் தந்துள்ளது.

சொல்கின்றவர்களுடைய நாவும் மனமும் தித்திக்க ஸ்ரீ உடையவர் என்றும் ஸ்ரீ எம்பெருமானார் என்றும் அழைக்கப்படுகின்ற ஸ்ரீ ராமாநுஜர் மானுடம் துயர்களி னின்றும் உய்யவும், வெல்லவும் கி.பி.1017-ஆம் ஆண்டில் அவதரித்தார். அவர் கண்ட சித்தாந்தத்தையும் அவருடைய தர்சனத்தின் வெற்றியையும் கண்டு ஸ்ரீ விவேகானந்தர் வியந்து கருணை நிறைந்த இதயம் கொண்ட ராமாநுஜர் (The great heart of Sri Ramanuja) என்று உருகினார்.

ஸ்ரீ எம்பெருமானாருடைய தர்சனத்தின் வெற்றியைப் பரப்பவும், நிலைப்படுத்தவும் அவருடைய அவதாரமாக ஸ்ரீ மணவாள மாமுனிகள் 'இருள்தரும் மாஞாலத்தே இன்புற்று' அனைவரும் வாழ கி.பி.1370-ஆம் ஆண்டில் அவதரித்தார்.

ஸ்ரீ மணவாள மாமுனிகள் தர்சன வெற்றிக்கு அஷ்டதிக்கஜங்களை நியமித்தருளினார். அவர்களில் முதல்வராக முதல் ஸ்ரீ வானமாமலை ராமாநுஜ ஜீயர் விளங்கினார்.

**வானமாமலை நகரைப் பற்றி நம்மாழ்வார் குறிப்பு:**

வைணவர்களின் முதல் ஆசாரியரான ஸ்ரீ நம்மாழ்வார் வானமாமலையைப் பற்றித் தம்முடைய திருவாய்மொழியில் (5–7) அருளிச் செய்கிறார். வானமாமலையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ தெய்வநாயகப் பெருமாளைச் "ஸ்ரீவர மங்கலநகர் வீற்றிருந்த எந்தாய்" (5-7-1) என்றும், "தேனமாம் பொழில் தண் ஸ்ரீவர மங்கலத்தவர் கைதொழ உறை வானமாமலையே அடியேன் தொழ வந்தருளே" (5–7–6) என்றும் பாடியுள்ளார்.

தற்காலத்தில் நாங்குநேரி என்று அழைக்கப்படும் வானமாமலையை நம்மாழ்வார் "ஸ்ரீவரமங்கலம்" என்று அழைக்கிறார்.

ஸ்ரீ வானமாமலை ஆண்டான் என்னும் பக்தர் ஸ்ரீ நாதமுனிகளை ஆச்ரயித்து அவருக்கு உறுதுணையாக இருந்தார் என்பதற்கு காட்டுமன்னார்குடி சிற்பங்களிலே சான்றுகள் உள்ளன. ஆகையால் வானமாமலையிலுள்ள தற்காலத்திலுள்ள ஸ்ரீ மடம் ஒன்றான ஸ்வாமியால் பிற்காலத்தில் தொடங்கப்பட்டது என்றாலும், நம்மாழ்வாருக்கு முன்பே ஸ்ரீதெய்வநாயகனுடைய திருக்கோவிலும்,மடம்போன்ற அதனுடைய நிர்வாக அமைப்பும் இருந்திருக்கலாம் என்று தெரிகிறது. அந்த அமைப்பே ஒன்றான ஸ்வாமியால் இன்றைய ஸ்ரீ ஜீயர் திருமடமாக வளர்ந்திருக்கிறது என்பது தெளிவு.

## இன்றைய வானமாமலை:

பாண்டிய நாட்டிலுள்ள பதினெட்டு திவ்ய தேசங்களில் ஒன்றான வானமாமலை பலவகையாலும் சிறப்புக்களைப் பெற்றுள்ளது. பதரிகாச்ரமம், சாளக்கிராமம், நைமிசாரணியம், புஷ்கரம், திருமலை, திருவரங்கம், ஸ்ரீமுஷ்ணம் வானமாமலை ஆகியவை இயற்கையாகத் தோன்றிய தலங்களாகப்(ஸ்வயம் வ்யக்த க்ஷேத்திரம்) போற்றப்படுகின்றன.

ஸ்வயம் வ்யக்தேஷு ஸர்வேஷு தோதாத்ரி ஸ்தல முத்தமம் என்ற ஸ்லோகத்தின்படி இது உத்தம மானது. இது பாபங்களைப் போக்கும் மலை வடிவாகத் திகழ்வதால் தோதாத்திரி க்ஷேத்திரம் எனவும், உரோமச முனிவரின் தவத்துக்கு இரங்கித் திருமால் வானம் என்ற வைகுந்தத்திலிருந்து கீழிறங்கி மலைக்கண் தோற்றமளித் தபடியாலும் குணக்குன்றாக இருப்பதாலும் வானமாமலை என்றும் ஆதிசேஷன் ஆங்கே இறைவனைக் குறித்து வழுவிலா அடிமைகள் செய்த தலமாதலின் நாகணைச்சேரி என்றும் சேற்றுத் தாமரைக் குளத்தில் மூழ்கி இருந்த திருமாலின் திருமேனியை வெளிக்கொணரும் பொருட்டு அவ்வேரியை நான்கு கூறாக வெட்டியதால் நாங்குநேரி (நான்கூன்ஏரி) என்றும் அழைக்கப்படுகிறது.

பேச்சு வழக்கில் நாகணைச்சேரி நான்கூன்ஏரி ஆகிய இரண்டு சொற்களில் ஒன்று காலப் போக்கில் இன்றைய நாங்குநேரி என்ற பெயரைப் பெற்றிருக்கலாம் ஆனால் இன்று அந்த நகர் வைணவர்களால் "வானமாமலை" என்றும், லௌகிக உலகினரால் "நாங்குநேரி" என்றும் அழைக்கப்படுகிறது.

தமிழ்நாட்டிலுள்ள திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்தில், நாங்குநேரி, தாலுகாவின் தலைமையக மாகவும், நாங்குநேரி, ஊராட்சி ஒன்றியத்தின் இருப்பிட மாகவும் விளங்கி வருகிறது. காஷ்மீர்–கன்னியாகுமரி நெடுஞ்சாலையில் அமைந்துள்ள நாங்குநேரி திருநெல்வேலி–கன்னியாகுமரி இருப்புப் பாதைத் தொடரிலும் ஒரு நிலையத்தைப் பெற்றுள்ளது. சுகாதார வசதி, மருத்துவ வசதி, தங்குமிடம், டவுண் பஸ் போக்குவரத்து, திருவள்ளுவர் பஸ் போக்குவரத்து ஆகிய நவீன வசதிகளையும் பெற்றுள்ளது.

## ஸ்ரீ வானமாமலை மடம்:

இந்தியாவில் உள்ள மடங்களுக்குள் பெயர் சொன்னவுடன் அனைவருக்கும் தெரிந்த அளவில்

செல்வாக்கான வைணவ மதப் பிரிவினரின் தலைமை இடமாக நாங்குநேரி ஸ்ரீவானமாமலை மடம் விளங்கி வருகிறது. தென்கலை வைணவப் பிரிவின் ஆசார்ய பீடமான இந்த மடம் நம்முடைய வணக்கத்திற்குரிய ஸ்ரீவானமாமலை ராமாநுஜ ஜீயர் அவர்கள் தலைமையில் இயங்கி வருகிறது. தென்னிந்தியாவில் இம்மடம் ஸ்ரீ வானமாமலை மடம் என்றும், வட இந்தியாவில ஸ்ரீ தோதாத்திரி மடம் என்றும் அழைக்கப்பட்டு புகழுடன் விளங்கி வருகிறது. இந்த மடத்தினுடைய ஆசார்ய பீடம் பெரிய பெருமாள் தொடங்கி, நாதமுனி ஆள வந்தார் நடுவாக விளங்கி வரும் ஓராண்வழி ஆசார்ய பரம்பரையில் ஸ்ரீ மணவாள மாமுனிகளுக்குப் பின் ஸ்ரீ வானமாமலை மடத்தின் ஆசார்ய பரம்பரையாக இடையீடின்றி இயங்கி வருகின்றது. ராமாநுஜர் எழுபத்து நான்கு சிம்மாசனாதி பதிகளை நியமித்து ஸ்ரீ வைஷ்ணவப் பயிரை வளர்த்தது போல ஒன்றான வானமாமலை ஜீயரும், தமிழ்நாட்டில் அஷ்டதிக்கஜாசார்யர்களையும், வடநாட்டில்தோதாத்திரி ஸ்தானங்களையும் ஏற்படுத்தி அந்த வைணவப் பயிரை வளர்த்தார். இந்த மடத்தின் ஆசார்யர்களுக்கு ஜகத்குரு என்ற பெயர் இருக்கிறது.

**எண்ணெய்க் கிணறு:**

இந்த நகரத்தில் திருக்கோவிலும் திருமடமும் புகழுடன் விளங்குவன போல, திருக்கோவிலிலுள்ள எண்ணெய்க் கிணறும் புகழுடன் விளங்கி வருகிறது. ஸ்ரீவானமாமலைப் பெருமாளுக்கு நாள்தோறும் நல் லெண்ணெயால் எண்ணெய்க் காப்பு (அபிஷேகம்) நடை பெறுகிறது. அந்ததிருமஞ்சனமான எண்ணெய் சேகரிக்கப் பட்டு இந்த எண்ணெய்க் கிணற்றில் சேர்க்கப்படுகிறது. இந்தக் கிணறு பழமை வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. இது வெய்யிலையும் மழையையும் தாங்கிக் கொண்டு பல நூறு ஆண்டுகளாக மருத்துவ வழியில் மதிப்பு மிகுந்த தாய் இருக்கிறது. அகத்திய முனிவருடைய மருந்து பற்றிய பாடல் ஒன்றில் இந்த எண்ணெய்க் கிணறு குறிப் பிடப்பட்டுள்ளதாய்க் கூறுவர். ஓராண்டில் வானமாமலைப்

பெருமாளுக்கு ஏறத்தாழ 2000 லிட்டர் நல்லெண்ணெய் திருமஞ்சனம் செய்யப்பட்டு, உடனுக்குடன் சேகரிக்கப் பட்டு இந்த எண்ணெய்க் கிணற்றில் சேர்க்கப்படுகிறது.

## ஸ்ரீ வானமாமலைத் திருக்கோவிலின் பெருமை:

இந்தத் தலத்தினுடைய உயர்ந்த சிறப்பு பாஞ்சராத்ர வைணவ ஆகமத்திலும், புராணங்களிலும் சொல்லப் பட்டிருக்கிறது.

இந்தத் திருக்கோவிலில் எழுந்தருளிய ஸ்ரீ தெய்வ நாயகப் பெருமாளின் மீது நம்மாழ்வார் பதினோரு பாடல்கள் பாடியுள்ளார். அப்பாடல்களில் அவர் எம் பெருமானின் திருவடிகளில் சரணம் அடைந்து, சரணா கதியின் பெருமையை விளக்குகிறார்.

நம்மாழ்வார் வானமாமலைப் பெருமாளை நோக்கி ''வானநாயகனே! வானவர் கொழுந்தே! ஸ்ரீவரமங்கை மணாளனே!'' என்று அனுசந்தித்துக் கொண்டு பெருமா ளுடைய திருவடிகளிலே வேரற்ற மரம் போல விழுந்து கிடக்க, எம்பெருமானும் அவரை வாரி எடுத்து ''மாமேகம் சரணம் வ்ரஜ (மாசுச)'' என்று அபயப்ரதானம் செய்ய ஆழ்வாரும் தம் பாசுரத்தாலே,

''ஆறுஎனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்
உனக்கோர்கைம்
மாறு நான் ஒன்றிலேன் எனதாவியும் உனதே''
(5-7-10).

என்று ஆத்ம சமர்ப்பணம் செய்து, எம்பெருமான் திருவடி களைப் பெற்று,''வானோர்க்கு ஆராவமுதே''என்னும்படி எம்பெருமானை அனுபவித்துத்தாமும் போக்ய பூதரானார்

இப்படிப்பட்ட நிகழ்ச்சி பிரகாசிக்கும்படி ஸ்ரீ வான மாமலைத் திருக்கோவிலில், மற்றைய ஆழ்வார்களைப் போல, நம்மாழ்வாருக்குத் தனித்திருமேனி இல்லை.

மாறாக. வானமாமலைப் பெருமாளுடைய பாதுகைகளான ஸ்ரீசடகோபத்தில் (ஸ்ரீசடாரியில்) விக்ரஹமாக எழுந்தருளியிருக்கிறார்.

இதனாலேயே இங்கே திருஅத்யயன உத்ஸவத்தில் நம்மாழ்வார் திருவடி தொழுவது இல்லை. அவர் தாம் எம்பெருமானைப் பிரியாமல் அவருடைய திருவடிகளில் எழுந்தருளி இருக்கிறாரே! இத்தலத்தின் பெருமையை ஆசார்ய ஹிருதயத்தில், ''ருசி விவஸர்க்குப் பாதமே சரணாக்கும் ஔதார்யம் வானமாமலையில் கொழுந்து விடும்'' என்ற சூத்திரத்தினால் விளங்கும். அவ்வாறே ஸ்ரீவசன பூஷணத்திலும் ''அர்ச்சாவதாரப் பெருமையை ருசி பிறந்தால், உபாயமாய், உபாய பரிக்ரஹம் பண்ணினால் போக்யமாய் இருக்கும்'' என்று அருளிச் செய்தார்.

## ஸ்ரீவானமாமலை ஜீயர்:

வானமாமலை திவ்ய தேசத்தில் ''செய்த வேள்வியர் வையத்தேவர்'' என்று நம்மாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பட்ட ஸ்ரீவைஷ்ணவ குலத்தினரான ஸ்ரீரெங்கராஜ ஸ்வாமிக்குப் புரட்டாசி மாதம் புனர்வசு நட்சத்திரத்தில் ஒரு குமாரர் அவதரித்தார். ஸ்ரீரெங்கராஜ ஸ்வாமி குழந்தையின் தேஜஸ்ஸை மனதிற்கொண்டு 'அழகிய வரதன்' என்று அதற்குப் பேரிட்டு, அவ்வக்காலங்களில் செய்ய வேண்டிய கர்மாக்களைச் செய்வித்தார்.

குழந்தைக்குப் 'பஞ்ச ஸம்ஸ்காரம்' செய்விக்கக் கருதி, ஆழ்வார்திருநகரியில் எழுந்தருளி இருந்த தம்முடைய ஆசார்யரான திருவாய்மொழிப் பிள்ளையிடம் அழைத்துச் சென்று பஞ்சஸம்ஸ்காரம் செய்யும்படிப் பிரார்த்தித்தார். திருவாய்மொழிப் பிள்ளை அக்குழந்தையைக் கடாக்ஷித்து, இவர் ஆசார்ய பரம்பரையிலே அந்வயிக்கத் தக்கவர் என்று திருவுள்ளம் பற்றித் தாமே செய்யாமல், தம்முடைய சிஷ்யரான மணவாளமாமுனிகளைக் கொண்டு பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்வித்தருளினார். குழந்தை அழகியவரதர் தந்தையுடன் ஊர்

திரும்பாமல் தம்முடைய ஆசாரியரான மணவாளமாமுனி களுடன் தங்கி விட்டார்.

ஆசாரியரிடத்தில் வேதவேதாந்தங்களையும் திவ்யப் பிரபந்த, ரகஸ்யக் கிரந்தாதிகளையும் வியாக்யானத் துடன் சேவித்துக் கொண்டு ஆசார்ய பரதந்திரராகவே எழுந்தருளி இருந்தார்.

இப்படிப் பன்னிரண்டு ஆண்டுகளாக மிகச் சிறு வயதிலேயே விரக்தராய் இருந்த இவரை ஒரு நாள் மணவாளமாமுனிகள் அழைத்து, ''அழகியவரதரே, நீர் ஊருக்குச் சென்று பெருமாளைச் சேவித்து விட்டு வாரும்'' என்று நியமித்து வானமாமலைக்கு அனுப்பி வைத்தார். அங்குத் திருமண ஏற்பாடுகள் நடக்க, இவர் கவலை கொண்டு,தெய்வநாயகன் திருமுன் சென்று,தெண்டனிட்டு ''பெருமாளே, வைராக்யம் கொண்ட அடியேனுக்கு அருள் புரிந்து, அடியேனைத் துறவியாக்க வேண்டும்'' என்று பிரார்த்தித்தார். பெருமாளும் உகந்து, அர்ச்சகர் வழியாக அழகியவரதருக்கு முக்கோலும்,செங்கற்பொடிக்கூறையும் கொடுத்து அணியச் செய்து ''ராமாநுஜன்'' என்னும் திருநாமத்தைச் சாத்தியருளி, ஓரிடத்தை மடமாகச் சுட்டி பரிகரங்களை அனுப்பி, ''ஜீயரை மடத்தில் சேர்த்து வாருங்கள்'' என்று நியமித்தருளினார்.

இதனைக் கேள்விப்பட்ட மலையாள நாட்டு மன்னன் ஜீயரைச் சேவித்துச் சில நிலங்களை மடத்துக்கு ஸமர்ப் பித்துத் திருக்கோவிலின் நிருவாகத்தையும் ஸ்வாமியிடம் ஸமர்ப்பித்துப் போனான். ராமாநுஜ ஜீயரும் சில காலம் அங்கிருந்து, தம்முடைய ஆசார்யரை விட்டுப் பிரிந்திருக்க முடியாமல்,ஆழ்வார்திருநகரிக்கு எழுந்தருளித்தம்முடைய ஆசார்யரான மணவாளமாமுனிகளை வேரற்ற மரம் போல் நெடிது வீழ்ந்து வணங்கினார். மாமுனிகளும் சீடரின் துறவுக் கோலத்தைக் கண்டு திகைப்பும் வியப்பும் ஒருங்கே அடைந்தார். ''வாரீர்! பொன்னடிக்கால் ஜீயரே! தம் பொன்னடி ஆனீரே (பாதரேகாமயம் ஸதா) முதலில்

நாம் ஆச்ரம ஸ்வீகாரம் செய்து, உமக்குப் பின்னர் வழங்க நினைத்திருந்தோம். நீர் முந்தி விட்டீரே'' என்று கூறி மிகவும் கொண்டாடினார்.

ஸ்ரீமணவாளமாமுனிகளும் தம்முடைய சீடரின் வைராக்ய நிஷ்டையையும், ஆசார்ய பக்தியையும் திருவுள்ளத்தில் கொண்டு, தாங்கள் இருவருமே ஒரே வியக்தி என்று தோன்றுமாறு, ஜீயருக்குப் பொன்னடிக்கால் ஜீயர் என்று திருநாமம் இட்டருளினார்.

சில காலம் சென்ற பின் மணவாளமாமுனிகள் பொன்னடிக்கால் ஜீயருடன் ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளி அவ்விடத்தில் நித்யவாசம் செய்தார். அப்பொழுது மணவாளமாமுனிகள், தம்முடைய சிஷ்யரான பொன்னடிக்கால ஜீயரை ஓராண்வழி ஆசார்ய பரம்பரைப் பீடத்தில் ஸ்தாபித்தருளத் திருவுள்ளம் பற்றிப் பொன்னடிக்கால் ஜீயரை தம்முடைய ஆசனத்தில் இருக்கும்படி நியமித்துத் தம்முடைய சங்குச் சக்கரங்களை அவருடைய கையில் கொடுத்து, அங்கு ஆச்ரயிக்கக் காத்துக் கொண்டிருந்த பலருக்கும் ஸம்ஸ்கார பூர்வமாக மந்த்ரோபதேசம் செய்வித்து ஓராண்வழி ஆசார்ய பீடத்தில் ஸ்தாபித்தருளினார் மேலும் பொன்னடிக்கால் ஜீயரைக் கொண்டு அவருடைய திருவடிகளில் ஆச்ரயித்தவர்களுக்குள் எட்டு ஸ்வாமிகளை அஷ்டதிக்கஜங்களாக நியமிக்கச் செய்தார். அந்த எண்மரும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய அர்த்தங்களைப் பெருக்கமாக விரித்துரைக்க வல்லாரான பேரறிஞர்களாக இருந்தனர். அவர்கள் முறையே (1) அப்பாச்சியார் அண்ணா, (2) போரேற்று நயினார், (3) ஶுத்த ஸத்வம் அண்ணா, (4) ராமாநுஜம் பிள்ளை, (5) சண்டமாருதம் மஹாசார்யார், (6) திருக்கோட்டியூர் அரையன், (7) பள்ளக்கால் சித்தர், (8) ஞானக்கண் ஆத்தான் என அறியப் படுகின்றனர்.

## அரங்கநகர் அப்பனைத் திருவாராதனப்பெருமாளாகப் பெறுதல்

சில காலம் கழிந்ததும் ஸ்ரீவானமாமலைப் பெருமாள்

தம்முடைய சந்நிதி நிருவாகத்தின் பொருட்டுப் பொன்னடிக்காலஜீயரை அனுப்புமாறு மணவாளமாமுனிகளுக்கு கட்டளையிட்டு அனுப்பினார். மணவாளமாமுனிகளும் பெருமாள் நியமனப்படிப் பொன்னடிக்கால் ஜீயரை அனுப்புவதாக நிச்சயித்துப் பெரிய பெருமாளிடம் நியமனம் பெற ஜீயரை அழைத்துக்கொண்டு பெரியபெருமாள் திருமுன்பு சென்று தெண்டனிட்டார்.

பெருமாளும் திருவுள்ளம் உகந்து தம்முடைய ஆசனத்தில் எழுந்தருளி இருந்த லக்ஷ்மீநாராயணனை (அரங்கநகரப்பனை) அர்ச்சகர் வழியாக எழுந்தருளப் பண்ணிப் பொன்னடிக்கால் ஜீயரான வானமாமலை ஜீயருடைய திருக்கரத்தில் கொடுத்து, "உமக்கும் உம்முடைய ஆசார்யருக்கும் திருவாராதனப்பெருமாளாக வருகிறோம் தம்முடைய வானமாமலைக்குப் பெருமாள் ஸ்ரீகார்யசர்த்தமாகப் போகலாம்" என்று அருளிப் பாடிட்டு அனுப்ப ஜீயரும் அரங்கநகரப்பனைப் பெற்று ஆசார்யரான மணவாளமாமுனிகளுடைய அர்ச்சாவிக்ரஹத்தையும் பெற்று ஆசார்யரின் ஆசிகொண்டு, வானமாமலைக்கு எழுந்தருளி மடத்தில் அரங்கநகரப்பனையும், மணவாளமாமுனிகளையும் பிரதிஷ்டித்தருளினார்.

பின்னர் ஜீயர் பரிவாரங்களுடன் கோவிலுக்குச் சென்று, பெருமாளைச் சேவித்து நிற்கப் பெருமாள், "நீர் இன்றுமுதல் வானமாமலை ராமாநுஜஜீயர் உமக்கு நம்முடைய உபயவிபூதி ஐஸ்வர்யத்தைத் தந்தோம். நம்முடைய ஆலயத்தின் நிர்வாஹத்தையும், நம் தர்சன நிர்வாஹத்தையும் நம் ராமாநுஜனைப் போலப் பண்ணக்கடவீர்" என்று நியமித்து, உபலாலித்துப் பரிகரங்களுடன் மடம் ஏற அனுப்பி அருளினார்.

சில காலம் சென்றதும், வானமாமலைக்கு மணவாளமாமுனிகள் எழுந்தருளிப் பொன்னடிக்கால் ஜீயரை ஆசீர்வதித்து, வானமாமலை சந்நிதி நிர்வாஹத்தைக் கண்டு அகமகிழ்ந்து, ஜீயரிடம் இந்த திவ்ய தேசத்தைப்

போலவே, இப்பாண்டிய நாட்டிலுள்ள மற்ற திவ்ய தேசங்களையும் நீரே நிருவஹித்து வரவேணும்'' என்று ஆணையிட அதனை அவரும் ஏற்றார்.

அக்காலத்தில் உற்சவ மூர்த்தியான தெய்வ நாயகனுக்குத் தனிக்கோவில் உற்சவ நாச்சியார் இல்லாமல் இருந்தது. அந்த நாச்சியாரை எழுந்தருளப் பண்ண ஜீயர் சிந்தித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது பெருமாள் ஜீயருடைய கனவிலேஎழுந்தருளி, ''நம்முடைய நாச்சியார் திருப்பதித் திருமலையில் எழுந்தருளியுள்ளார் அவரை அழைத்து வந்து நமக்கு விவாஹம் பண்ணி வையும்'' என்று நியமித்தருளினார்.

திருமலையிலும் அங்கு எழுந்தருளியிருந்த தனிக் கோவில் நாச்சியாருக்கு ஸ்ரீனிவாசனுடன் திருமணம் செய்விக்க முயற்சி செய்ய, அவர்கட்கு ஸ்ரீனிவாசன் ''நமக்கு மார்பிலே அலர்மேல்மங்கை உறைகிறாள். ஆதலின், இம்மணம் இப்போது வேண்டுவதில்லை''என்று கனவில் காட்டியருள, அது நின்றது. ஜீயரும் திருமலையை நெருங்கும் அளவில், அந்தத் தனிக்கோவில் நாச்சியார் ஸ்தலத்தாருடைய கனவில். ''என் ஐயன் வானமாமலை ஜீயர் வருகிறார். அவரிடம் என்னைச் சேர்ப்பித்து விடுங்கள். அவர் என்னைத் தெய்வநாயகனுக்கு மணம் செய்விப்பார்'' எனக் கூறியருளினார். ஸ்தலத்தார் இவ் வாச்சரியத்தை எண்ணித் தங்களுக்குள் ஆலோசித்துக் கொண்டு இருக்கும் பொழுதே, பொன்னடிக்கால் ஜீயரும் அங்கு எழுந்தருள, எல்லோரும் வியப்படைந்து, கனவும் இவர் வருகையும் ஒத்திருப்பது கண்டு, கனவில் வந்த நியமனப்படியே அந்த நாச்சியாரை இவரிடம் அளித்தனர் ஜீயரும் கௌரவத்துடன் நாச்சியாரை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு, வந்து ஸ்ரீதெய்வநாயகனுக்குக் கல்யாணத் திருக்கோலம் செய்து, சேர்ப்பித்து உவந்திருந்தனர். அந்த நாச்சியார் ஸ்ரீவரமங்கைப் பதிக்கு எழுந்தருளினபடியால், ஊர்ப்பெயராலேயே ஸ்ரீவரமங்கை என வழங்கப்படுகிறாள். பொன்னடிக்கால் ஜீயரும் அந்த

நாச்சியாருடைய அருளுக்குப் பாத்திரமானபடியால், ''ஸ்ரீவரமங்கைமுநி'' என வழங்கப்படுகிறார்.

இப்படி இந்த திவ்ய தம்பதிகளுக்கு நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவ, மாஸோத்ஸவ, வருஷோத்ஸவாதிகளைச் சிறப்புற நடத்திக்கொண்டு கைங்கர்யமே பொழுது போக்காக எழுந்தருளி இருந்தார். பெரிய பெருமாளுக்குப் பெரியாழ்வார் மாமனாராக ஆகியது போல், இவர் தெய்வ நாயகனுக்கு மாமனாராக ஆயினார். ஆனால் பெரியாழ் வாரைப் பெரிய பெருமாள் ஸ்ரீவில்லிபுத்தூருக்கே அனுப் பினார். தெய்வநாயகனோ இவரைப் பக்கத்திலே வைத் துக் கொண்டு சகல வரிசைகளைச் செய்தும், பெற்றுக் கொண்டும் வருகிறார். ஆண்டுக்கு ஒருமுறை இந்த திவ்ய தம்பதிகள் எண்ணெய்க்காப்பு உத்ஸவம் முடிந்த கனுத் திருநாளிலே மாமனார் இல்லமாகிய மடத்திற்கு எழுந் தருளிச் சகல வரிசைகளையும் பெற்று உபலாலித்தருளிச் சந்தோஷமாக எழுந்தருளுகின்றனர். இது இந்த ஊரில் மட்டுமே நடக்கும் ஓர் விசேஷ உத்ஸவம்.

சில ஆண்டுகள் சென்றபின், தெய்வநாயகனுடைய சந்நிதி மிகச் சிறியதாகவும், பழுதுபட்டும் இருந்ததைக் கண்டு, அதைத் திருப்பணி செய்யத் திருவுள்ளம் கொண்டு பெருமாளுடைய நியமனம் பெற்று வடதேசங்களுக்குப் பரிவாரங்களுடன் யாத்திரையாக எழுந்தருளினார். வழி யில் ஸ்ரீரங்கத்தில் மணவாளமாமுனிகளுக்குத் தெண்டன் ஸமர்ப்பித்து அவருடைய அனுமதியும் கொண்டார். ஒரு தந்தையானவர், தமது அந்திமதசையில் தமக்குரிய தாயபாகத்தைத் தமது மகன் தொலை நாடுகளில் இருந் தாலும், அவனிடம்சேர்ப்பிக்கும்படி அறிவிக்குமாப்போலே தமது அநுமதியுடன் வடதேச யாத்திரைக்கு எழுந்தருளி இருக்கும் வானமாமலை ஜீயரிடம் தமது திருக்கையில் தரித்துள்ள திரிதண்டத்தின் உபதண்டத்தையும் ஓராண் வழி பரம்பராப்ராப்தமான திருவாழி மோதிரத்தையும், தமது ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளையின் திருவடி நிலைகளையும் கொடுக்க வேண்டுமாக நியமித்தும்,

அவரைத் தமக்குப் பெருக்கத் திரு அத்யயனம் செய்யச் சொல்ல வேண்டுமாய் நியமித்தும் மணவாளமாமுனிகள் திருநாட்டுக்கு எழுந்தருளினார். அவை வானமாமலை ஜீயருக்குப் பிரசப்தமாகி இப்பொழுதும் பிடித்தார் பிடித் தாரைப் பற்றித் தரித்து வருகிறார்கள்.

வடநாட்டு யாத்திரை சென்று திரும்பும் வழியில் பொன்னடிக்கால் ஜீயர் திருமலைக்கு எழுந்தருளி, அங்கு தம்முடைய ஆசார்யரான மணவாளமாமுனிகள் திருநாடு அலங்கரித்த செய்தியைக் கேட்டு, மிகவும் வருந்தி ஸ்ரீசூர்ண பரிபாலனம், திருவத்யயனம் ஆகியவற்றைப் பெருக்க நடத்தினார்.

## ஒன்றான ஸ்வாமி செய்த திருப்பணிகள்:

வானமாமலை நகருக்கு யாத்திரை முடித்துக் கொண்டு எழுந்தருளிய பொன்னடிக்கால் ஜீயரான ராமாநுஜ ஜீயர் தாம் கொண்டு வந்த திரவியங்களைக் கொண்டு பழுதுபட்டிருந்த கர்ப்பக்கிரஹம் விமானம் முதலியவற்றை நிலைத்து நிற்குமாறு செப்பனிட்டுத் தருப்பணி செய்தும், அர்த்த மண்டபம், மஹா மண்டபம் தாயார் சந்நிதி, ஆண்டாள் சந்நிதி முதலியவற்றுக்குக் கற்பணி செய்தும் ஸ்ரீவானமாமலைப் பெருமாளுக்கு மேற் கூறிய நற்பணிகளைச் செய்தார்.

சந்நிதியில் நித்திய, நைமித்திக, பக்ஷ, மாஸ, அயன, ஸம்வத்ஸராதி, உற்சவாதிகளையும் குறைவற நடத்திக் கொண்டு எழுந்தருளி இருந்தார்.

## வானமாமலை ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி பரம்பரை:

ஒரு நாள் வானமாமலைப் பெருமாள் ராமாநுஜ ஜீயரை அருளிப்பாடிட்டு, ''ஒராண் வழியாய் வரும் குரு பரம்பரை மேலும் தொடர்ந்து வரும்படி ஒருவரை நிய மிக்க வேண்டும்; அந்தப் பரம்பரை ராமாநுஜன் என்னும் திருநாமத்துடன் துரீய ஆச்ரமியாய் (துறவியாய்) இருக்க வேண்டும்'' என்று நியமித்தார்.

ஜீயரும் தமக்கு அந்தரங்கமான ஒருவரைத் தரிசன ப்ரவர்த்தகராக நியமித்தருளினார்.

இவ்வாறே பரம்பரையாக நியமிக்கப்பட்டு. ராமாநுஜன் என்னும் திரு நாமத்தோடு,சந்நயஸ்தர்களாய் இன்றளவும் பகவத் கைங்கரியம். தர்சன நிர்வாஹம் இவற்றைச்செய்து கொண்டு வருகிறார்கள். கி.பி.1447-ம் ஆண்டிலிருந்து ஓராண்வழி குரு பரம்பரையில் முதல் ஜீயராகப் பொறுப்பேற்றுக் கொண்ட ஸ்ரீராமாநுஜ ஜீயரி லிருந்து இதுவரை இருபத்தெட்டு ஜீயர்கள் மடாதிபதி களாக இருந்து வந்துள்ளார்கள். தற்போது இருபத் தொன்பதாவது பட்டமாக ஸ்ரீபட்டர்பிரான் ராமாநுஜ ஜீயர் 27-8-1989 அன்று பட்டமேற்றுள்ளார்கள். இம் மடம் தோன்றிய கி.பி. 1447-ஆம் ஆண்டிலிருந்து இந்த ஆசார்ய பரம்பரை விடுபடாமல் தொடர்ச்சியாக வந்துள்ளது.

## பொன்னடிக்கால் ஜீயர் ஸ்வாமியின் பெருமை:

மேற்சொன்ன வைபவங்களோடு எழுந்தருளி இருந்த வானமாமலை ஜீயர் ஸ்வாமியை அவனுடைய அஷ்டதிக்கஜங்களும், எண்ணற்ற ஸ்ரீவைஷ்ணவர்களும் ஓர் அவதாரமாகவே கருதி வந்தனர். இவர்கள் அநுசந் தித்து வந்த ஒரு ஸ்லோகம் வருமாறு.

''ஸ்ரீராமாநுஜ ஸமாரம்பாம் ஸ்ரீராமாநுஜ மத்யமாம்
ஸ்ரீராமாநுஜ பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்''

இதன் பொருள்: ''பலராமனுடைய தம்பி கிருஷ்ணனுக்கு ராமாநுஜன் என்று பெயர் அமையும். அவர் கீதையை உபதேசித்தப்படியாலே பிரதமாசாரியர் ஆவார். எம்பெரு மானாராகிய ராமாநுஜர் நடுவிலுள்ள ஆசார்யர்; வான மாமலை ஜீயர் ஆகிய ராமாநுஜர் இறுதி ஆசார்யர். இந்தகுரு பரம்பரையைச் சேவிக்கிறேன்'' என்பதாகும்.

பெருமானாகிய ராமாநுஜரிலிருந்து தொடங்கிப் பத்தாவது ஆசார்யர் ராமாநுஜர்; ராமாநுஜரிலிருந்து

தொடங்கிப் பத்தாவது ஆசாரியர் பொன்னடிக்கால் ஜீயராகிய வானமாமலை ராமாநுஜ ஜீயர்.

இதிலிருந்து பத்தொன்பது இரத்தினங்கள் கொண்ட ஹாரத்துக்கு எம்பெருமானார் நடுநாயகமான மணியாக இருப்பார் என்பது பெறப்படும்.

மணவாளமாமுனிகள் தம்முடைய உபதேசரத்தின மாலையில்.

"மன்னுயிர்காள் இங்கே மணவாள மாமுனிவன்
பொன்னடியாம் செங்கமலப் போதுகளை—உன்னிச்
சிரத்தாலே தீண்டின் அமானவனும் நம்மைக்
கரத்தாலே தீண்டல் கடன்"

என்னும் இறுதிப் பாட்டில் "பொன்னடியாம் செங்கமலப் போதுகள்" என்பதைப் பொன்னடிக்கால் ஜீயர் என்றே பெரியோர் நிர்வகிப்பர்.

மேலும் இயல்சாற்றுமுறையில்.

"நன்று திருவுடையோம் நானிலத்தில் எவ்வுயிர்க்கும்
ஒன்றும் குறையில்லை ஓதினோம்—குன்றம்
எடுத்தான் அடிசேர் இராமா னுசன்றாள்
பிடித்தார் பிடித்தாரைப் பற்றி"

என்னும் பாசுரத்தில் "இராமாநுசன் தாள் பிடித்தார், பிடித்தார்" என்பதும் பொன்னடிக்கால் ஜீயரே என்பர் ஆன்றோர்.

ஒன்றான வானமாமலை ஜீயரின் சிஷ்யரான ராமானந்தர் என்பவர் வடநாட்டில் ஜீயருடைய புகழைப் பரப்பினார். அவருடைய பக்தி இயக்கத்தினால் மலர்ந்தவர்களே சைதன்யர், கபீர்தாஸர் முதலியோர்.

**அந்திமதசை:**

வானமாமலை ஜீயர் நூறு ஆண்டுகள் இந்த நிலவுலகில் வாழ்ந்து எம்பெருமானுக்குச் சொற்பணிகளும்,

பொற்பணிகளும் செய்தார். திருப்பாவைக்கு ஸ்வாபதேச வியாக்யானம் செய்தருளினார். ஆண்டாளைக் குறித்து. "கோலச்சுரி சங்கை" என்ற தனியன் ஒன்றும் அருளிச் செய்தார். தம்முடைய இறுதிக் காலத்தில் மணவாள மாமுனிகளின் திருவடியைச் சிந்தித்து அவருடைய குண நலன்களைப் பதினேழு வெண்பாக்களில் அடக்கி அநுசந்தித்தார்.

"வித்தகனே வேந்தே மணவாள மாமுனியே
சுத்தனே சோதிச் சுடர்முடியே — முத்தே
கரும்பின் சுவையே கடலில் அமுதமே
அரும்பினே தாள்நீயே அருள்"

என்று மனமுருகி வேண்டி மணவாளமாமுனிகளின் திருவடிகளைச் சேர்ந்தார். அவருடைய விருப்பத்தின்படி களமூர் வரதமுனி ராமாநுஜ ஸ்வாமி வானமாமலை மடத்தினுடைய பீடத்தின் இரண்டாவது ஜீயராக பீடாரோஹணம் செய்யப்பட்டார்.

ஸ்ரீரங்கம், ஆழ்வார்திருநகரி, வானமாமலை ஆகிய திவ்ய தேசங்களில் மணவாளமாமுனிகளின் திருவடிக்கீழ் பொன்னடிக்கால் ஜீயரைச் சேவிக்கலாம்.

## இரண்டாவது: களமூர் வரதமுனி ராமாநுஜ ஸ்வாமி

இந்த ஸ்வாமி கி.பி. 1482 முதல் 1502 முடிய எழுந்தருளி இருந்தார். இவர், வானமாமலைப் பெருமாளுடைய மணிவாசலில் தெற்கும் வடக்குமாக விஸ்தாரத்தோடு வெகு அழகியதாய் ஒரு திருமண்டபத்தைக் கட்டுவித்தார். வானமாமலை விமானத்திலும் திருப்பணிகள் செய்தருளினார். இந்த ஸ்வாமி திருநாராயணபுரத்துக்கு எழுந்தருளி. அங்கே திருநாராயணப்பெருமாளுக்கு ஸுவர்ணத்தாலே திருவபிஷேகம் பண்ணிச் சாத்தியருளினார். (19)

## மூன்றாவது: செண்டலங்கார ராமாநுஜ ஸ்வாமி

இவர் கி.பி. 1502 முதல் கி.பி. 1520 முடிய அருளாட்சி செய்தார். இவர், ஸ்ரீ அரங்கநகரப்பன் ஸந்நிதி, திருமடைப்பள்ளி ஆகியவற்றைக் கற்பணியாக கட்டுவித்தார். இவர் காலத்தில் அரசன் ஒருவன் மடத்திற்கு நிலங்களையும், ஸ்ரீ தெய்வநாயகப் பெருமாளுக்கு ஏராளமான அணிகலன்களையும் பட்டுப் பீதாம்பரங்களையும் அளித்தான். (18)

## நான்காவது: ரங்கப்பராமாநுஜஸ்வாமி

ஸ்ரீரங்கப்ப ஸ்வாமி கி.பி. 1520 முதல் 1586 முடிய எழுந்தருளி இருந்தார். இவர் மடத்திற்காக ஏராளமாகப் பொருள் சேர்த்தார். தெய்வநாயகப் பெருமாள் திருவாராதனத்துக்குப் பயன்படும்படியாக நல்ல நிலங்களை ஏராளமாக வாங்கினார். தெய்வநாயகன் சந்நிதியில் பெரிய திருமதின், பெரிய கோபுரம், சிறிய திருமதிள், சிறிய கோபுரங்களையும் அழகாக கட்டியருளினார். தெய்வநாயகனுக்குத் திருத்தேர் செய்வித்து, ஆண்டாளுக்குத் தனிக் கோவில் விமானங்கள் கட்டியருளினார். மடத்திலும் கல்யாண மண்டபம் என்ற பெயரில் ஒரு மண்டபத்தைக் கட்டி, அதன் தூணிலேயே தமது ஆசார்யரான செண்டலங்கார ராமாநுஜ ஸ்வாமியையும் ஸதா ஸேவிக்கும்படி ப்ரதிஷ்டிப்பித்தார். (66)

## ஐந்தாவது: திம்மையாங்கார் என்னும் திருவேங்கட ராமாநுஜ ஸ்வாமி

இந்த ஸ்வாமி கி.பி. 1586 முதல் 1604 முடிய பீடத்தை அலங்கரித்தார். இவர் ராதாபுரம் என்ற சமஸ்தானத்திற்கு எழுந்தருளினார். அங்கிருந்த அரசரால் ஜீயர் ஸ்வாமி கௌரவிக்கப்பட்டு, ஏராளமான சன்மானங்கள் அவருக்கு வழங்கப்பட்டன. ஸ்வாமி மீண்டும் வானமாமலைக்கு எழுந்தருளித் திருப்பணிகளைத் தொடர்ந்தார். தம்மைக் கௌரவித்த மன்னருடைய பெய

ராலி 'குலசேகரன் திருமண்டபத்தையும்' தசாவதாரத் திருமண்டபத்தையும் கட்டியருளினார். அடுத்து வானமா மலைப் பெருமாளுக்கும் ஸ்ரீவரமங்கைத் தாயாருக்கும் இரத்தினங்களால் இழைக்கப்பட்ட அநேக திருவாபரணங் களும், பட்டுப் பீதாம்பரங்களும் ஸமர்ப்பித்தருளினார். மேலும் வெள்ளி யானை வாகனம் ஒன்றையும் உருவாக்கி பெருமாளுக்கு ஸமர்ப்பித்தார். வானமாமலை குரு பரம் பரையின் முதல் ஆசார்யரான பெரிய வானமாமலை ஜீய ரின் பெயரில் 'அழகிய வரதன் திருமண்டபம்' ஒன்றை நிர்மாணித்தருளினார்.

பின்னும் வானமாமலை மடத்திலுள்ள ஸ்ரீ அரங்க நகரப்பன் சந்நிதியில் சில திருப்பணிகளைச் செய்து, தேரின் வடிவத்தில் ஊஞ்சல் (டோலை) ஒன்றை ஸமர்ப் பித்தும், திவ்யப்பிரபந்தம் சேவிப்பதற்காக ராமாநுஜன் திருமண்டபம் ஒன்றையும் கட்டியருளினார்.

இந்த ஸ்வாமி ஆழ்வார்திருநகரியிலே ஒரு மடம் கட்டி, அதில் வானமாமலைப் பெருமாள் தெய்வநாயகன் அரங்கநகரப்பன் ஆகிய இவர்களைப் பிரதிஷ்டிப்பித்து, தமக்கு முந்திய நான்கு ஜீயர் ஸ்வாமிகளின் அர்ச்சா ரூபங்களையும் பிரதிஷ்டிப்பித்து, அங்குத் திருவாராதனக் கைங்கர்யங்களையும் நிர்வாஹத்தையும் கவனிக்க ஒரு ஸ்ரீவைஷ்ணவரையும் நியமித்தருளினார். (18)

## ஆறாவது: எம்பெருமானார் ஸ்வாமி

இந்த ஸ்வாமி கி.பி. 1604 முதல் 1659 முடிய அருளாட்சி செய்தார்கள். இந்த ஸ்வாமி ஸ்ரீதெய்வ நாயகன் சந்நிதி கோபுர வாசலுக்கு வெளிப் பக்கமாய் மடத்து வாயிலுக்கு எதிரே வெட்ட வெளியைப் போக்கும் படியாயும், அழகியதாயும் இருக்கிற திருமண்டபத்தைக் கட்டியருளினார். பின்னும் மடத்திலே ராமாநுஜ விலாசம் என்ற திருமண்டபத்தையும், திருமஞ்சன மண்டபத்தையும் கட்டியருளினார். மேலும், சேற்றுத் தாமரை மேடிட்டிருந் ததை ஆழங்காலபட வெட்டிச் சீர்திருத்தியும் அதன் கரை

களுக்குக் கற்பணி செய்தும் அருளினார்.(வீரப்பநாயகன்) வேணுகோபாலன் சந்நிதி மண்டபங்கள் (55)

## ஏழாவது: பெரிய திருவேங்கட ராமாநுஜ ஸ்வாமி

ஏழாவது ஸ்வாமி கி.பி. 1659 முதல் 1667 முடிய வீற்றிருந்தருளினார்கள். இந்த ஸ்வாமி ஸ்ரீவரமங்கை நாச்சியாருக்கு இரத்தினங்களால் ஆன தாடங்கமும் இரத்தினக் கிரீடமும், தெய்வநாயகப் பெருமாளுக்குத் தங்கத்தாலே கவசமும், வெள்ளியால் ஆன அலங்கார பீடமும், வெள்ளியால் ஆன தோளுக்கு இனியானும் ஸமர்ப்பித்தருளினார்கள். (8)

## எட்டாவது: கோனப்பராமாநுஜஸ்வாமி

இந்த ஸ்வாமி கி.பி. 1667 முதல் 1677 முடிய எழுந்தருளி இருந்தார்கள். இந்த ஸ்வாமி சகல வித்யை களையும் அறிந்து வைத்திருந்தார். தேவாலய பூஜா விதி களிலும், மந்திர தந்திர விதிகளிலும் ஸமர்த்தராய் இருந்து கொண்டு, வானமாமலைப் பெருமாள் திருவாராதன விஷயத்தில் அர்ச்சக ஸ்வதந்த்ர வ்யவஸ்தையும், திரு வாராதன க்ரமவ்யவஸ்த்தையையும் செய்தருளினார்.(10)

## ஒன்பதாவது: சின்ன ரங்கப்ப ஸ்வாமி

இந்த ஸ்வாமி கி.பி. 1677 முதல் 1697 முடிய வீற்றிருந்தருளினார்கள். இந்த ஸ்வாமி வானமாமலைப் பெருமாள் திருவாராதனத்துக்குப் பயன்படும்படியும், நித் தய உத்ஸவங்களுக்குப் பயன்படும்படியும், அழகான ஆப ரணங்களைச் செய்து ஸமர்ப்பித்தார். மடத்திலுள்ள அரங்கநகரப்பன் சந்நிதியிலே திருவாராதனம் செய்வதற் காகப் பாத்திரங்களை எல்லாம் புதுப்பித்தருளினார். தெய்வநாயகன் சந்நிதியிலும், மடத்திலும் உள்ள குறை களை எல்லாம் நிவர்த்தி செய்தும், ஜீயர் ஊற்றை அபி விருத்தி செய்தும், தெய்வநாயகன் சந்நிதிக்குத் தேவை யான வெங்கலப் பாத்திரங்களைச் செய்வித்தருளினார். ஸ்ரீதெய்வநாயகன் சந்நிதி மணிவாயிலுக்குள்ளே ஆழ்

வார்களுக்கும், மணவாளமாமுனிகள் உள்ளிட்ட ஆசாரியர் களுக்கும் சந்நிதி கட்டுவித்து ப்ரதிஷ்டிப்பித்தருளினார். ஆழ்வார்திருநகரி மடத்திலுள்ள பழுதுகளை நீக்கி அருளினார். (20)

## பத்தாவது: திருவேங்கட ராமாநுஜ ஸ்வாமி

இந்த ராமாநுஜ ஸ்வாமி கி.பி. 1697 முதல் 1700 முடிய எழுந்தருளி இருந்தார்கள். இந்த ஸ்வாமி தெய்வ நாயகன் சந்நிதியில் உள்ள மடப்பள்ளிகளை மிகப் பெரிய அளவில் கட்டி வைத்தார்கள். ஆழ்வார்திருநகரி நம்மாழ்வார் திருத்தேர், தங்கப்பலிலக்கு தங்கஸ்தூபி பிரதிஷ்டை செய்வித்து அருளினார். (3)

## பதினொன்றாவது: பெரிய தெய்வ நாயக ஸ்வாமி

இந்த ஸ்வாமி கி.பி 1700 முதல் 1732 முடிய பீடத்தை அலங்கரித்தார்கள். மணமிக்க மலர்களைத் தரக் கூடிய செடி கொடி மரங்கள் நிறைந்த பெரிய நந்தவனம் ஒன்றைத் தெய்வநாயகப் பெருமாளுக்காக இந்த ஸ்வாமி உண்டாக்கினார். வானமாமலைப் பெருமாளுக்கு உத்ஸவம் கண்டருள நல்ல நீர் நிலையுள்ள வரமங்கா ஸமுத்திரம் என்ற திருக்குளத்தை வெட்டியும். அதன் அருகிலே தெய்வநாயகப் பெருமாளுக்கு ஒரு திருமண்டபமும் கட்டி அருளினார். தங்க மயமாகவும், வெள்ளி மயமாகவும் உள்ள தூண்களால் அமைக்கப்பட்ட ஒரு புஷ்பக விமான வாகனத்தைச் செய்வித்தருளினார். மேலும், சந்நிதித் திருவாராதனத்துக்குரிய பாத்திரங்களைஎல்லாம் வெள்ளியாலும், தங்கத்தாலும் செய்தருளி, தெய்வநாயகப் பெருமாளுக்குச் சுத்தத் தங்கத்தால் அபேத்ய கவசமும் செய்து அருளினார். பின்னும் தெய்வநாயகப் பெருமாளுக்கு உயர்ந்த ரத்தினங்களால் கிரீடமும், கேயூரங்களும் கண்டிகைகளையும் செய்வித்தருளி, ஸ்ரீவரமங்கைத் தாயாருக்கு இரத்தினங்களால் இழைக்கப்பட்ட தங்க ஜடைகளும், அரைச் சலங்கைகளும் பண்ணி ஸமர்ப்பித்தருளி

னார். மேலும், வானமாமலைப் பெருமாளுக்குத் திருக் கைகள் திருவடிகள், திருமுடிகள், கர்ணபத்ரஸ்ங்கள் கண்டசரம், திருவாழி திருச்சங்கு ஆகியவற்றைத் தங்கத் தாலே கவசமாகப் பண்ணிச் சாத்தியருளினார். இத்துடன் பலவிதமாய் அழகு நிறைந்த உத்தமமான பட்டு வஸ்தி ரங்களும், பீதாம்பரங்களும் ஆகியவற்றைப் பெருமாளுக் கும், தாயாருக்கும் ஸமர்ப்பித்தருளினார். ஸ்ரீதெய்வநாய கன் ஸ்ரீவரமங்கைத் தாயார் ஆகிய இவர்கள் நாள் தோறும் எழுந்தருளி இருக்கும் இடத்தில் ஐந்து வர்ணங் களால் அழகுப்படுத்தப்பட்ட மேல்கட்டிகளும், மஞ்சங் களும், ஹம்ஸதூளிகா பூர்ணமான அணைகளும் மெத்தை களும், அவற்றுக்கு உத்தமமான விரிப்புக்களும் ஸமர்ப் பித்தருளினார். இன்னும் அழகும் பலவிதப் பெருமைகளும் நிறைந்த சந்திரபிரபா வாகனமும், ஆளும் பல்லக்கும், தாமரை வடிவமாயும் அழகாகவும் இருக்கின்ற ஒரு தேரை யும் தெய்வநாயகப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்தருளினார் தவிர,மடத்திற்குள் குளத்தின் அருகில்மரவேலைப்பாடுகள் நிறைந்த சேநாநி மண்டபம் என்ற ஒரு திருமண்டபத்தை கட்டினார். அத்துடன் தெய்வநாயகப் பெருமாளுக்குத் தந்தங்களால் உருவாக்கப்பட்ட இரண்டு தந்தப் பல்லக்கு களைச் செய்து பணிவுடன் அளித்தார். தெய்வநாயகனும் தாம், தமக்கொரு தந்தப் பல்லக்கைத் திருவுள்ளம் பற்றி, மற்றொரு திருப்பல்லக்கைத் தமக்கு அபிமதரான ஜீயருக்கு ஸம்மானமாக ஸாதித்துக் கிருபை செய்து அருளினார். இவ்வாறு முப்பத்திரண்டாண்டுகள் பீடத்தில் எழுந்தருளி, அநேகக் கைங்கர்யங்களைச் செய்தருளினார் இவர் தமது மனத்திற்கு உகந்த வெங்கடாசார்யர் என்ப வரைத் தமக்கு அடுத்த பட்டமாக நியமித்துச் சந்யாசம் அருளிச் சின்ன வேங்கட ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி என்ற பட்டம் சூட்டினார். (32)

## பன்னிரண்டாவது சின்னத்திருவேங்கட ராமாநுஜ ஸ்வாமி

இந்த ஸ்வாமி கி.பி. 1732 முதல் 1757 முடிய அருளாட்சி செய்தார்கள். இந்த ஸ்வாமி தம்முடைய

ஆசார்யனிடம் நியமனம் பெற்றுக் கொண்டு ஆழ்வார் திருநகரியில் கைங்கர்யபரராக இருந்தார். இவருடைய ஆசார்யன் தெய்வநாயக ஜீயர் ஸ்வாமி ஆழ்வார் பெருமானை மங்களாசாஸநம் செய்ய எழுந்தருளி, அங்கிருந்து ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளத் திருவுள்ளம் பற்றிச் சின்னத் திருவேங்கட ராமாநுஜ ஜீயரையும் அழைத்துச் சென்றார். அங்குத் திருவேங்கட ராமாநுஜ ஜீயர் ஆழ்வார்திருநகரியில் ஆழ்வாருக்குதிருத்தேர்ஸமர்ப்பிக்க விண்ணப்பித்தார் பெரிய பெருமாள் அநுக்கிரஹத்தால் பாண்டிய மன்னன் தேருக்கான திரவியங்களைத் தர ஸ்ரீவானமாமலை ஜீயர் ஸ்வாமியிடம் அநுமதி பெற்று, ஆழ்வார்திருநகரி அடைந்து அழகான தேரொன்றினை உருவாக்கி ஆழ்வாருக்கு ஸமர்ப்பித்தருளினார். இதன் மத்தியில் ஸ்ரீவானமாமலை ஜீயர் திருநாட்டுக்கு எழுந்தருள, இவர் வானமாமலை வந்து, தமது ஆசார்யருக்கான தீர்த்தம் முதலியவற்றை நிறைவேற்றியருளினார்.

இந்த ஸ்வாமி மடத்தில் காலக்ஷேபக்காரர்கள் எழுந்தருளி இருந்து ததீயாராதன காலத்தில் அமுது செய்தருளும்படி முதலி திரையாய் பரகால விலாசம் என்கிற பெயரை உடையதான ஒரு கல் மண்டபத்தைக் கட்டி அருளினார். அடுத்து,மடத்திற்குள் அரங்கநகரப்பனுக்குத் திருப்பணியார மடைப்பள்ளி ஒன்றையும் கற்பணியாகச் செய்தருளினார். மேலும், சேற்றுத்தாமரை மேல்கரையில் இருக்கிற திருவரசைச் சுற்றித் திருமதில்களைக் கட்டியருளி, அதன் மத்தியில் தெய்வநாயகனுடைய திருவடிகளைக் கொண்ட திருமண்டபத்தைக் கட்டியருளினார். பின்னும், தெய்வநாயகப் பெருமாள் நாச்சிமார்களுடன் நாள்தோறும் எழுந்தருளி இருக்கும்படி தங்கத்தாலான ஒரு சிம்ஹாசனம் செய்தருளினார். மேலும், பளபளக்கும் தங்க வேலைப்பாடுகள் நிறைந்த திருச்சிவிகை ஒன்றையும் படைத்தருளினார். மேலும், தெய்வநாயகனுக்கு மரகதம் முதலான பல இரத்தினங்களாலே அலங்காரமாக செய்யப்பட்ட கிரீடமும், முழுத் தங்கத்தாலே அழகான ஒரு திருப்பல்லாக்கும், செய்தருளினார். (25)

## பதிமூன்றாவது: சின்னத் தெய்வநாயக ஸ்வாமி

இந்த ஸ்வாமி கி.பி. 1757 முதல் 1760 முடிய வீற்றிருந்தருளினார்கள். இந்த ஸ்வாமி வானமாமலை தெய்வநாயகப் பெருமாளுக்கும் ஆழ்வார்திருநகரி ஸ்ரீ பொலிந்து நின்ற பிரானுக்கும், திருக்குறுங்குடி நம்பிக்கும் திருமார்பில் தங்கத்தாலே லக்ஷ்மீ பதக்கங்கள் சாத்தியருளினார். இவர் காலத்தில் நவாபு ஸ்ரீவைஷ்ணவர் ததீயாராதனத்துக்கு அனேக கிராமங்களை வழங்கியுள்ளார். (3)

## பதினான்காவது: கூரத்தாழ்வான் ஸ்வாமி

கூரத்தாழ்வான் ஸ்வாமி கி.பி. 1760 முதல் 1772 முடிய பீடத்தை அலங்கரித்து அருளினார்கள். இந்த ஸ்வாமி தெய்வநாயகன் உத்ஸவ காலங்களில் உலாவியருளும்படித் தங்கத்தாலே அழகிய லக்ஷணத்தோடு பெரிய திருவடியை ப்ரதிஷ்டிப்பித்து அருளினார். ஜீயர் ஊற்றைச் சுற்றிலும் நிரந்தரமாய்ப் படிக்கட்டுகளைக் கட்டியருளினார். (12)

## பதினைந்தாவது: ஸ்ரீவத்ஸ சிஹ்ந ஸ்வாமி

ஸ்ரீவத்ஸ சிஹ்ந ஸ்வாமி கி.பி. 1772 முதல் 1782 முடிய வீற்றிருந்தருளினார்கள்.

இவர் ஸ்ரீரங்கம். திருப்பதி. ஸ்ரீகூர்மம், இராம தீர்த்தம், பதரி, சாளக்கிராமம். வைகுந்தம். துவாரகை அயோத்தி. ஜகந்நாதம். திருவல்லிக்கேணி. ஸ்ரீரங்கம் திருப்புல்லாணி இன்னும் பல திவ்ய தேசங்கள் அடங்கிய பரதகண்டம் முழுவதும் யாத்திரை செய்தருளி எல்லாத் திவ்யதேசங்களிலும் எம்பெருமான்களை மங்களாசாஸநம் செய்தருளினார்கள். சிதிலமாயிருந்த ஸ்ரீவரமங்கை ஜடி பந்தங்களை எல்லாம் புதுப்பித்து. பலப்படுத்தி பல திவ்ய தேசங்களிலுமிருந்தும் ஸ்ரீவைஷ்ணவர்களை எல்லாம் அழைப்பித்து வெகுவிமரிசையாக ஸம்ப்ரோக்ஷண

மஹோத்ஸவம் கொண்டருளப் பண்ணினார். தெய்வ நாயகப் பெருமாளுக்கு அநேக ரத்தினாபரணங்களையும், பட்டுப் பீதாம்பரங்களையும், யானைகளையும் குதிரை களையும் ஸமர்ப்பித்தருளினார். (10)

## பதினாறாவது: திருநகரி திருவேங்கட ஸ்வாமி

இந்த ஸ்வாமி கி.பி. 1782 முதல் 1801 முடிய பீடத்தை அலங்கரித்தார்கள். இவருடைய அருளாட்சிக் காலத்தில், கேரள மன்னர் வானமாமலைக்கு வந்து ஜீயர் ஸ்வாமியையும் தண்டம் ஸமர்ப்பித்துத் தெய்வநாயகப் பெருமாளுக்கு இரத்தினங்களால் இழைக்கப்பட்ட தங்கக் கவசம் சாத்தவேண்டும் என்று ஸ்வாமி நியமனம் செய்தார் அதற்கு மன்னர் சம்மதித்து, ஜீயர்ஸ்வாமியிடம் விண்ணப் பமாக அவர் ஸ்ரீபத்மநாபப்பெருமாளை மங்களாசாஸனம் செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தார். சிலகாலம் சென்ற பிறகு ஸ்வாமியும் திருவனந்தபுரத்திற்குப் பத்மநாபப் பெருமாளை மங்களாசாஸனம் செய்ய எழுந்தருள, மன்னர் எதிர்கொண்டு வரவேற்றார். ஸ்வாமி அங்கிருந்து வானமாமலைக்கு திரும்புகின்ற காலத்தில் இரத்தினங் களால் இழைக்கப்பட்ட தங்கக் கவசத்தைத் தெய்வநாயக பெருமாளுக்கு ஸமர்ப்பித்தார். ஸ்வாமி அதனைப் பெற்றுக் கொண்டு, வானமாமலைக்கு எழுந்தருளி, மேற்படி கவசத்தைத் தெய்வநாயகப்பெருமாளுக்கு ஸமர்ப்பித்தார்

வைகாசி விசாக உத்ஸவத்திற்கு ஸ்வாமி ஆழ்வார் திருநகரி எழுந்தருளி ஸ்வாமி நம்மாழ்வாரையும், ஆதிப் பிரானையும் மங்களாசாஸனம் செய்தருளி, மீண்டும் வானமாமலைக்கு எழுந்தருளினார். இவ்வாறு ஆழ்வார் திருநகரிக்கு வைகாசி விசாக உத்ஸவத்திற்காக அடிக்கடி ஜீயர் ஸ்வாமி எழுந்தருளினார். இவ்வாறு ஒரு வைகாசி விசாக உத்ஸவத்தில் ஸ்வாமி நம்மாழ்வார் திருத்தேரில் எழுந்தருளும் போது, ஜீயர் ஸ்வாமி ஓர் இரத்தினக் கிரீடத்தை நம்மாழ்வாருக்குச் சாத்தியருளினார்.

அடுத்து ஸ்ரீவில்லிபுத்தூருக்கு ஸ்வாமி எழுந்தருளி

ஸ்ரீ ஆண்டாளையும், ஸ்ரீரங்கமன்னாரையும் மங்களாசாஸனம் செய்தருளி, மீண்டும் வானமாமலைக்கு எழுந்தருளினார்.

ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளி இருக்கும் பெரிய பெருமாளை மங்களாசாஸனம் செய்விக்கத் திருவுள்ளம் கொண்டு திருப்புல்லாணி, மன்னார்குடி, தஞ்சாவூர், கும்பகோணம், நாதன்கோவில், திருச்சித்ரகூடம், சிங்கப் பெருமாள் கோவில், திருவல்லிக்கேணி, திருப்பதி, காஞ்சி புரம் முதலிய திருத்தலங்களில் எழுந்தருளி இருக்கும் எம்பெருமான்களை மங்களாசாஸனம் செய்தருளி, ஸ்ரீரங் கத்துப் பெரிய பெருமாளையும் மங்களாசாஸனம் செய் தருளி, அங்கிருந்து தஞ்சாவூர் வழியாக வானமாமலைக்கு எழுந்தருளினார்கள்.

மீண்டும் ஆழ்வார்திருநகரிக்கு எழுந்தருளி, ஸ்வாமி நம்மாழ்வாருக்குத் தங்கத்தினாலான பிடிகளைக் கொண்ட இரண்டு சாமரங்களையும், பட்டுப் பீதாம்பரங் களையும் ஸமர்ப்பித்தருளினார்.

வானமாமலை தெய்வநாயகப் பெருமாள் சந்நிதியின் அருகில் உத்ஸவ வசதிக்காக ஒரு திருமண்டபமும், ஆக் நேயத்தில் பெரிய திருவடிக்கு திருவாராதனம் செய்யச் சௌகரியமாக இருக்கும் பொருட்டுத் திருமதிள்களையும் கட்டியருளினார். (19)

## பதினேழாவது: திருவேங்கட ராமாநுஜ ஸ்வாமி

இந்த ஸ்வாமி கி.பி. 1801 முதல் 1813 முடிய வீற்றிருந்தருளினார்கள். ஆழ்வார்திருநகரியில் ஸ்வாமி நம்மாழ்வாருக்கு வைகாசி விசாக உத்ஸவம் நடக்கின்ற காலத்தில், திருத்தேர் அன்றும் பத்தாம் திருநாளன்றும் ஸ்வாமி எழுந்தருளி மங்களாசாஸனம் செய்தருளினார்கள்

சிலகாலம் சென்ற பிறகு ஸ்ரீவில்லிபுத்தூருக்குச் சென்று ஆண்டாளை மங்களாசாஸனம் செய்தருளி, அங்கி

ருந்து ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளி பெரிய பெருமாளை மங்களாசாஸனம் செய்வித்தருளி. இடைப்பட்ட இடங்களில் உள்ள திவ்ய தேசங்களில் எழுந்தருளி இருக்கும் எம்பெருமான்களை மங்களாசாஸனம் செய்வித்தருளி. திருப்பதி சென்று அப்பனைத் தொழுது அங்கிருந்து ஸ்ரீபெரும்பூதூர் சென்று எம்பெருமானாரை மங்களாசாஸனம் செய்து, திருக்கோவிலூர் முதலிய திவ்ய தேசங்களைச் சேவித்துக் காட்டுமன்னார்குடிக்கு எழுந்தருளி நாதமுனிகளையும், ஆளவந்தாரையும், மன்னனாரையும் மங்களாசாஸனம் செய்தருளினார். அங்கிருந்து திருச்சித்ரக்கூடம், நாதன்கோவில் முதலிய இடங்களுக்கு எழுந்தருளி, நாதன்கோவிலிலுள்ள மடத்தை விஸ்தரித்து திருப்பணிகள் செய்தருளினார். அங்கிருந்து மன்னார்குடி சென்று. அங்கு ராஜமன்னனாரின் பங்குனி உத்ஸவத்தில் நான்காவது திருநாளன்று கோவர்த்தனகிரியைத் தூக்கியருளும் உத்ஸவத்தைச் சிறப்பாக நடத்தியருளியும், உத்ஸவம் பூர்த்தியாகும் அன்று திருத்தேர் ஸமர்ப்பித்து உள்ளார்.

தமது யாத்திரையை முடித்துக் கொண்டு வானமாமலைக்கு எழுந்தருளி, தெய்வநாயகன், ஸ்ரீவரமங்கைத் தாயார், ஆண்டாள் ஆகியோருக்குத் தனித்தனியாகத் தந்தமும், தங்கமும் கலந்த பல்லக்குகள் மூன்றினை ஸமர்ப்பித்தருளினார். மேலும், "நூறு தடா நிறைந்த அக்கார அடிசில்" என்னும்படித் தளிகையும் ஸமர்ப்பித்தருளினார். மேலும், தெய்வநாயகப் பெருமாளுக்கு நவரத்தினங்களால் இழைக்கப்பட்ட தங்கக்குதிரை வாகனத்தை ஸமர்ப்பித்தருளினார்.

மீண்டும் ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளி பெரிய பெருமாளை மங்களாசாஸனம் செய்தருளினார். பெரிய பெருமாள் சந்நிதியில் திருமணத் தூணுக்கும், அந்த வாயிலில் உள்ள கதவுகள், படிகள் ஆகியவற்றுக்கும் தங்கத்தாலே கவசங்கள் செய்து ஸமர்ப்பித்தருளினார்.

அடுத்து வானமாமலைக்கு எழுந்தருளி ஸ்ரீவர

மங்கைத் தாயாருக்குப் பாதச்சிலம்புகள் முதலான சிறந்த ஆபரணங்களையும், தங்கத்தால் உருவாக்கப்பட்ட அன்ன வாகனத்தையும் ஸமர்ப்பித்தருளினார்.

ஆழ்வார்திருநகரிக்கு எழுந்தருளி, வைகாசி உத்ஸவத்துக்குப் பயன்படும்படியாகத் தங்கவேதிகை ஒன்றை ஸமர்ப்பித்தருளினார்.

வானமாமலை மடத்தில் கிணற்றுக்குப் பக்கத்தில் அழகியமணவாளன் திருமண்டபம் ஒன்றைக் கட்டி அதிலே அழகியமணவாளனைப் பிரதிஷ்டிப்பித்து அருளினார். ஒரு தந்தப்பல்லக்கினைச் செய்து தாமும் பயன்படுத்தித் தமது சிஷ்யரான அடுத்தஜீயருக்குப்பிரசாதமாக அருளினார். (18)

## பதினெட்டாவது: பெரிய சடகோப ராமாநுஜ ஸ்வாமி

பெரிய சடகோப ஸ்வாமி கி.பி. 1813 முதல் 1843 முடியப் பீடத்தை அலங்கரித்தார்கள். இவர் தம்முடைய முதல் யாத்திரையாக ஆழ்வார்திருநகரிக்கு எழுந்தருளி, ஆதிப்பிரானையும், ஸ்வாமி நம்மாழ்வாரையும் மங்களாசாஸனம் செய்வித்தருளினார்.

வானமாமலை தெய்வநாயகன் சந்நிதியில் சாமரங்கள் பழுதுபட்டிருப்பதைப் பார்த்து வெள்ளியிலே தங்கமுலாம் கொண்ட தண்டுகளால் ஆன இரண்டு சத்ரங்களையும், புதிதாக இரண்டு சாமரங்களையும் ஸமர்ப்பித்து அருளினார்.

வானமாமலை தெய்வநாயகப் பெருமாளுக்குத் தங்க வேலைப்பாடுகளுடன் கூடிய விதானமும், வெள்ளிக் கவசங்களால் ஆன தூண்களும் அமைந்த வேதிகை ஒன்றையும், தங்கவேலைப்பாடுகளுடன் கூடிய விதானமும், தங்கக் கவசங்களால் ஆனதும் அழகு நிறைந்த வேலைப்பாடுகளுடன் கூடியதுமான பூபாலராயன் என்ற தங்க

ஸிம்ஹாசனத்தைத் தெய்வநாயகப் பெருமாளும், ஸ்ரீவர மங்கைத் தாயாரும் எப்பொழுதும் எழுந்தருளியிருக்கும் வண்ணத்தில் ஸமர்ப்பித்தருளினார்.

ஸ்ரீவரமங்கைத் தாயாருக்கு வெள்ளியால் ஆன தோளுக்கினியான் ஒன்றையும், தெய்வநாயகன் எழுந்தரு ளும்படி கஜலக்ஷ்மி வாகனம் ஒன்றையும் செய்தருளினார்

யாத்திரை மேற்கொள்ள ஆர்வம் கொண்டவராய் ஜீயர்ஸ்வாமி ஸ்ரீவில்லிபுத்தூருக்கு எழுந்தருளி ஆண்டாள் ரங்கமன்னனார் வடபெருங்கோவிலுடையான் பெரியாழ் வார் ஆகியோரை மங்களாசாஸனம் செய்வித்தருளி, அங் கிருந்து மன்னார்குடிக்கு எழுந்தருளி, ராஜமன்னனாரை மங்களாசாஸனம் செய்வித்தருளினார். அப்போது அங்கு உள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்வாமியிடம் வந்து, மன்னார் குடியிலுள்ள மடத்தின் சம்ரக்ஷணைக்காக, அருகிலுள்ள மருதூர் என்ற கிராமத்திலிருக்கும் நிலங்களை இதயப்பூர் வமாக ஒப்படைக்க, ஸ்வாமியும் கிருபையுடன் ஏற்றருளி னார், அங்கிருந்து ஸ்வாமி வானமாமலைக்கு எழுந்தருளி னார். தங்கத் தகடுகள் பதிப்பிக்கப்பட்ட தந்தப் பல்லக்கு ஒன்றை ஆயத்தப்படுத்தி ஸ்ரீவில்லிபுத்தூருக்கு எடுத்துச் சென்று ஸ்ரீஆண்டாளுக்கு ஸமர்ப்பித்தருளினார். ஆழ்வார் திருநகரி நம்மாழ்வார் கோவிலில் உள்ள மணிக்கதவில் தங்கத் தகடுகளைப் பொதிந்து அருளினார்.

தங்கத் தகடுகள் பதித்த தந்தத்தால் ஆன சிம்மா சனம் ஒன்றையும், சிங்கமுக அமைப்புகளுடன் கூடிய வெள்ளியாலான தோளுக்கினியான் ஒன்றையும் ஜீயர் ஸ்வாமி தெய்வநாயகப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்தருளி னார். தெய்வநாயகன் சந்நிதியில் உள்ள பலகணிக்கதவு களைத் தங்கத் தகடுகளால் பொதிந்தார்.

மேலும், தெய்வநாயகனுடைய வஸந்த உத்ஸ வத்திற்கு, அவர் எழுந்தருளும்படி சிம்மவாகனம், கருட வாகனம், சேஷவாகனம், சந்திரப்பிரபை, யானை வாகனம் அனுமார் வாகனம், கிளி, தாமரை வாகனம் ஆகியவை

களைச் செய்து, அவற்றைத் தங்கத்தகடுகளால் போதிந் தருளினார். வஸந்த உத்ஸவத்திற்காக சிறந்த மரங் களைச் சூழ அமைத்து வஸந்த மண்டபம் என்ற பெயரில் ஒரு திருமண்டபம் கட்டியருளினார்.

ராமாநுஜம்புத்தூரில் பெரிதாகவும், அழகாகவும் ஒரு மடம் கட்டியருளினார்.

அத்தாழநல்லூரில் கஜேந்திரவரதப்பெருமாளுக்கு ஒரு சந்நிதி கட்டுவித்தும், அந்த ஊரில் மடம் ஒன்றைக் கட்டுவித்தும் கிருபை செய்தருளினார்.

ஸ்ரீவில்லிபுத்தூரில் ரங்கமன்னனாருக்கு தங்கச் சிம்ம வாகனம் ஒன்றையும், ஆழ்வார் திருநகரியில் நம் மாழ்வாருக்குத் தங்கஅன்னவாகனம் ஒன்றையும் ஸமர்ப் பித்தருளினார். திருமழிசை அண்ணா அப்பங்கார் ஸ்வாமி என்று பிரஸித்தரான ஸ்ரீவீரராகவாசார்யர் என்ற ஸம்ஸ் கிருத மஹாவித்வான் அருளிச் செய்த, ''வாணவிம்சதி'' என்ற நூலுக்கு இந்த ஸ்வாமி வியாக்யானம் அருளியுள் ளார். அந்நூல் அச்சாகி ஸ்ரீமடத்தின் ஸரஸ்வதி சாலை யில் உள்ளது. (30)

## பத்தொன்பதாவது: பெரிய பட்டர்பிரான் ஸ்வாமி

பெரிய பட்டர்பிரான் ஸ்வாமி கி.பி. 1843 முதல் 1853 முடிய பட்டத்தை அலங்கரித்தருளினார்கள். இந்த ஸ்வாமியைச் சில சிஷ்யர்கள் நேரிலும், விண்ணப்பித்தல் வழியிலும் அகில பாரத யாத்திரை மேற்கொள்ள வேண்டி னர். ஸ்வாமியும் அந்த வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு ஸ்ரீவரமங்கைத் தாயாரிடமும், தெய்வநாயகப் பெருமாளி டமும் விண்ணப்பித்து வடக்கு நோக்கி எழுந்தருளினார்.

ஸ்ரீவில்லிபுத்தூர், திருமாலிருஞ்சோலை, திரு மோகூர், திருமெய்யம், ஸ்ரீரங்கம், சோழ தேசத்திலுள்ள திவ்ய தேசங்கள், திருவல்லிக்கேணி, ஸ்ரீபெரும்பூதூர்,

திருப்பதி, திருமலை, ஹைதராபாத், பிருந்தாவனம், அங்குக் கண்ணபிரான் உலவிய இடங்கள், ஜயபுரம், அயோத்தி, வாரணாசி, சித்ரகூடம், ஜகநாதம், கிருஷ்ணா கோதாவரி நதிப்பகுதிகள், சனிவாரப்பேட்டை, காஞ்சி புரம், திருவாலிதிருநகரி, நாதன்கோவில், மன்னார்குடி, திருப்புல்லாணி, ஆழ்வார்திருநகரி, ராமாநுஜம்புதூர் வழியாக வானமாமலை எழுந்தருளினார்கள்.

சிலகாலம் கழித்து இரண்டாம் யாத்திரையைத் தொடங்கினார்கள். ஸ்ரீவில்லிபுத்தூர், ஸ்ரீரங்கம், திரு நாராயணபுரம், ஸ்ரீரங்கப்பட்டணம், மைசூர், வனப்பருத்தி ஹைதராபாத், திருப்பதி, ஸ்ரீபெரும்பூதூர், சோழதேசத்துப் பதிகள், ஸ்ரீரங்கம் ஆகிய ஊர்களில் உள்ள எம்பெருமான் களுக்கு மங்களாசாஸனம் செய்வித்து, வானமாமலைக்கு எழுந்தருளினார்.

வனப்பருத்தி நாட்டரசன், தனது நாட்டில் ஸ்ரீரங்க நாதன் சந்நிதி ஒன்றைக் கட்டிப் பெருமாளை அங்குப் பிரதிஷ்டிக்க விரும்புவதாகவும், அதற்காக ஜீயர் ஸ்வாமி அவனுடைய ஊருக்கு எழுந்தருள வேண்டும் என்று பிரார்த்தித்து ஆளனுப்பினான்.

ஜீயர் ஸ்வாமியும் தமக்குத் திருநாடு அணித்தா வதற்கு முன்னரே, தாமும் ஒரு முறை வடதேச யாத்திரை கொள்ள வேணும் என்று திருவுள்ளம் கொண்டிருந்தார். அதன்படி ஸ்ரீவில்லிபுத்தூர், திருமாலிருஞ்சோலை, ஸ்ரீரங் கம், ஸ்ரீபெரும்பூதூர், மதுரமங்கலம், திருப்பதி, ஆகிய இடங்களில் எம்பெருமான்களுக்கு மங்களாசாஸனம் செய் வித்து, அடுத்து வனப்பருத்திக்கு எழுந்தருளினார். அங்கு ஸ்ரீரெங்கநாதன் சந்நிதி நூதனமாகக் கட்டப்பட்டிருக்கும் இடத்திற்கு ஸ்ரீரங்கபுரம் என்று திருநாமம் சாத்தித் திருப் பிரதிஷ்டையை மிகுந்த விதரணையாகச் செய்வித்து நித்யோத்ஸவ, மாஸோத்ஸவாதிகளை நன்கு நடை பெறும்படி ஏற்பாடு செய்து தாமும் சில நாள் எழுந்தருளி இருந்து பின்பு ஹைதராபாத் (பாக்ய நகரம்) திற்கு எழுந் தருளினார். அங்குள்ள ஸீதாராமபுரத்திலேயே ஜீயர்

ஸ்வாமி எழுந்தருளியிருக்கும்போது, திருமேனியில் நோவு சாத்தி இருந்து, திருமேனி மிகவும் தளர்ந்தது. தமது யாத்திரையில் உடன் வந்தவரும், தமது ஆப்தரும், குணபூஷிதராயும், துரியாச்ரமத்தை முன்னமே பெற்றவராயும் இருந்த கலியன் ராமானுஜ ஸ்வாமியை அழைத்து ஸவஸ்தானத்தில் அபிஷிக்தராக்கி அருளினார். பின்னர் ஸீதாராமபுரத்திலேயே திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

மேற்படி ஜீயர் ஸ்வாமி தமது முதல் யாத்திரையில் பிருந்தாவனத்திற்கு எழுந்தருளியிருந்தபோது அங்கு ஒரு திருக்கோவிலை உண்டாக்கி ஆண்டாளையும் ரங்கமன்னனாரையும் பிரதிஷ்டிப்பித்தார்.

வானமாமலை தெய்வநாயகப் பெருமாளுடைய கொடிமரம் பழுதுபட்டிருந்ததை அறிந்த ஜீயர் ஸ்வாமி வலிமையான ஒரு புதிய மரத்தைக் கொண்டு கொடி மரம் செய்வித்து, முழுவதும் தங்கமுலாம் பூசிய தகடுகளால் கவசமும் செய்வித்து, ஜீரணோர்த்தாரணம் செய்து பிரதிஷ்டையை மிகவும் சிறப்பாகச் செய்வித்தருளினார்.

பின்னும் வானமாமலைப் பெருமாள் திவ்ய விமானம் பழுதுபட்டிருந்தமையால், அதனை பழுது நீக்கி, சுதை வேலைகளைச் செய்து, தங்கத்தாலான கலசத்தை ஸமர்ப்பித்தும், ஸ்ரீவரமங்கை நாச்சியார், ஆண்டாள் எம்பெருமானார் சந்நிதி விமானங்களில் ஏற்பட்டிருந்த பழுதுகளையும் நீக்கி, சுதைவேலைப்பாடுகளைச் செய்து, வண்ணங்களால் அழகுபடுத்தி, கலசங்களையும் ஸமர்ப்பித்து விமானப் பிரதிஷ்டா மஹோத்ஸவத்தைச் சிறந்த முறையில் செய்வித்தருளினார்.

ஒரு நாள் வானமாமலைப் பெருமாள் ஜீயர் ஸ்வாமியின் கனவில் தோன்றி, ''ஜீயரே, நாமும் உமது மகளான ஸ்ரீவரமங்கையும் உத்ஸவகாலங்களில் வாகனங்களில் எழுந்தருளும்போது மழை, வெய்யிலால் பாதிக்கப்படுகிறோம். அதனால் திருமதிள்களுக்கு உட்பகுதியில்

நான்கு பக்கங்களிலும் திருச்சுற்று மண்டபத்தைக் கட்டு வீராக'' என்று ஆணையிட்டார். ''மூகப்பே கூவிப் பணி கொள்ளாய்'' என்று நம்மாழ்வார் கேட்டுப் பெற்றதைத். தாம் கேளாமலே பெருமாள் பணி கொண்டதை நினைத்து ஆனந்தம் அடைந்து, சிறந்த கற்களைத் தேர்ந்தெடுத்து நிறையச் சிற்பிகளைப் பணியில் அமர்த்திக் குறிப்பிட்ட காலத்திற்கு முன்பே பணிகளை நிறைவேற்றியருளினார்

வானமாமலை சந்நிதியில் எழுந்தருளி இருந்த திருவேங்கடமுடையானுக்குத் தனியே ஒரு கோவில் கட்டி வைத்துப் பிரதிஷ்டிப்பித்தருளினார்.

ஸ்ரீவில்லிபுத்தூரில் எழுந்தருளி இருக்கும் ஸ்ரீ ஆண்டாளும், ரங்கமன்னனாரும் ஜீயர் ஸ்வாமியின் கனவில் திருமணக் கோலத்தில் சேவை ஸாதித்து, ''ஜீயரே நம்முடைய வைபவத்துக்குத் தகும்படி பெரிய திருத்தேர் ஒன்றைச் செய்வித்து, நாமும் நாச்சியாரும் வீதியாற வரும்படிச் செய்யக் கடவீர்'' என்று நியமித்தனர். ஜீயர் ஸ்வாமியும் திருவனந்தபுரம்மன்னருக்கு ஸ்ரீமுகம்அனுப்பி மரங்களைப் பெற்று, ஸ்ரீவில்லிபுத்தூருக்கு அனுப்பி, தகுதி வாய்ந்த பலதச்சர்களைக் கொண்டு சாஸ்த்ரோக்தமான பிரகாரத்தாலே பெரிய தேரைச் செய்வித்து ஸமர்ப்பித்து அருளினார்.

ஸ்ரீவில்லிபுத்தூரில் பட்டர்பிரானான பெரியாழ்வார்க்குத் தங்கமயமான பத்மாசனம் ஒன்று ஸமர்ப்பித்து அருளினார்.

திருநாராயணபுரத்திலே செல்லப்பிள்ளைக்குத் தங்கத்தாலே பெரிய திருப்பல்லக்கு ஒன்றைச் செய்தருளி அதில்ஒரு புறத்தில் அரங்கநகரப்பனுடைய பிம்பத்தையும் மற்றைய பக்கத்தில் அஞ்சலி ஹஸ்தராய் தம்மையும் அமைப்பித்து ஸமர்ப்பித்தருளினார்.

மேலும், காஞ்சீபுரத்திலும், திருவல்லிக்கேணியிலும் மடங்களைக் கட்டுவித்தருளினார்.

திருநெல்வேலியில் சக்ரவர்த்தித் திருமகனாகும் ஸீதா பிராட்டியுமாய் எழுந்தருளியிருக்கும் ஒரு மடத்தைச் சம்பாதித்தருளினார்.

வானமாமலை மடத்தில் எழுந்தருளியிருக்கும் அரங்கநகரப்பனுக்கு வெள்ளியால் விசித்திர வேலைப் பாடுகள் அமைந்த ஊஞ்சல் ஒன்றை ஸமர்ப்பித்தருளினார்

ஸ்ரீரங்கம் பெரிய பெருமாளுக்கு ஒரு பெரிய யானையை ஸமர்ப்பித்தருளினார்.

வனப்பருத்தி அரசன் வானமாமலைப் பெருமாளுக்காக இரண்டு கிராமங்களை ஜீயர் ஸ்வாமியிடம் ஸமர்ப்பித்தான்.

இவ்வாறு ஜீயர் ஸ்வாமி பத்து ஆண்டுகள் பீடத்தை அலங்கரித்தருளினார்கள். (10)

## இருபதாவது: கலியன் ராமாநுஜஸ்வாமி

கலியன் ராமாநுஜ ஸ்வாமி கி.பி. 1853 முதல் 1867 முடிய அருளாட்சி செய்தார்கள். தம்முடைய ஆசார்யர் ஹைதராபாத் ஸீதாராமபுரத்தில் திருநாட்டுக்கு எழுந்தருளியவுடன், கலியன் ராமாநுஜ ஸ்வாமி திருவத்யயனத்தைப் பெருக்கச் செய்து வானமாமலைக்கு எழுந்து அருளினார்.

சில நாட்கள் கழிந்தவுடன் கைங்கர்ய ருசியாலே திருநாராயணபுரத்தில் செல்லப்பிள்ளைக்கு உத்ஸவங்களில் ஏறி உலாவும்படித் தங்கமயமான குதிரை வாகனம் ஒன்று செய்வித்து ஸமர்ப்பித்தருளினார்.

சிறிது காலம் சென்ற பிறகு திவ்ய தேசங்களை எல்லாம் மங்களாசாஸனம் செய்ய வேண்டும் என்ற அவா உடையவராய் யாத்திரைக்கு எழுந்தருளிப் பாண்டிய நாடு சோழவள நாடு, தொண்டை நாடு. இவைகளில் உள்ள திவ்ய தேசங்கள் எல்லாவற்றையும் மங்களாசாஸனம் செய்து கொண்டு மீண்டும் வானமாமலைக்கு எழுந்தருளி

னார். இந்த ஸ்வாமி நவரத்தினங்களால் இழைக்கப் பட்டுத் தங்கத்தால் செய்யப்பட்ட யஜ்ஞோபவீதத்தைத் தெய்வநாயகனுக்கு ஸமர்ப்பித்தருளினார்.

ஆழ்வார்திருநகரியில் நம்மாழ்வாருக்கு தங்கத்தால் செய்யப்பட்ட பெரிய பத்மாசனம் ஒன்றை ஸமர்ப்பித்தார் மேலும், அவ்வாழ்வாருக்கு பொருத்தமான கவசம் ஒன்று ஸமர்ப்பிக்கத் தங்கமும் பொருளும் அருளினார். தவிர, தங்க வேலைப்பாடுகள் நிறைந்த திருப்பல்லக்கு ஒன்றையும் ஸமர்ப்பித்தருளினார்.

திருக்குறுங்குடியில் பெரியதும், அகலமுமான திருமடம் ஒன்றைக் கட்டியருளினார்.

ஸ்ரீபெரும்பூதூரில் மிகப் பெரிய மடம் ஒன்றை ஸ்தாபித்தருளினார்.

சோழ தேசத்தில் இருக்கும் திருநகரியில் உள்ள திருமங்கையாழ்வார் சந்நிதிப் பிரகாரங்களில் திருமதிள் சுவர்எடுக்க ஏராளமான செல்வங்களை வழங்கியருளினார்

வானமாமலையில் தெய்வநாயகன் ஸ்ரீவரமங்கைத் தாயாருக்குத் தெப்போத்ஸவம் செய்வித்து, மகிழ்ச்சி அடைந்தார்.

தம்மிடம் காலக்ஷேபம் செய்து சிறந்த ஞானவானாய் இருக்கும் ஸ்ரீவைஷ்ணவர் ஒருவர் ஸம்ஸார கந்தத்தையும் ஸஹியாது வைராக்யசாலியாய் கைங்கர்ய பராய் இருக்க, அவரைக் கடாக்ஷித்து துரீயாச்ரம ஸ்வீகாரம் செய்வித்து நாதன்ஜீயர் என்று திருநாமம் சாற்றி, நாதன்கோவில் ஸந்நிதிகைங்கர்யங்களை நடத்தி வரும்படி அவரை நியமித்தருளினார்.

மற்றைய திவ்ய தேசங்களைச் சேவிக்க வேண்டும் என்ற மனோரதம் ஜீயர் ஸ்வாமிக்கு ஏற்பட்டது.

பரிவாரங்களுடன் ஹைதராபாத்துக்குஎழுந்தருளிஸீதா ராமபுரத்திலுள்ள தமது ஆசார்யனின் சரம ஸ்தானத்தைச்

சேவித்தார். கிருஷ்ணா கோதாவரி நதி தீரங்களில் உள்ள திவ்ய தேசங்களை மங்களாசாஸனம் செய்தருளி னார். அங்கிருந்து திருமலை சென்று திருவேங்கட முடையானை மங்களாசாஸனம் செய்தருளினார். அங்கு இருந்து ஸ்ரீபெரும்பூதூர், காஞ்சீபுரம், சோழ தேசத்தில் உள்ள திருவாலி திருநகரி முதலிய இடங்களிலுள்ள எம் பெருமான்களை மங்களாசாஸனம் செய்து, நாதன்கோவி லுக்கு எழுந்தருளும்போது திருமேனி மிகவும் தளர்வெய்த ஸ்வாமியும் நாதன் சந்நிதியில் சில நாட்கள் எழுந்தருளி இருந்து, திருமேனியின் இளைப்பைப் பரிஹரித்துக் கொள்ள நினைத்தருளினார். திருமேனிநிலை நாளுக்கு நாள் க்ஷீணமடைந்தது. ஸ்வாமியும் நன்றாய்ச் சிந்தித்து அங்கு நாதன் சந்நிதியில் ஸ்ரீகார்யங்களைத் தம்மால் நிய மிக்கப்பட்டு நிருவகித்து வருகின்ற நாதன் ஜீயரைத் தம் ஸ்தானத்திற்குத் தகுதி வாய்ந்தவராய் நிர்த்தாரணம் செய்து அவரை அழைத்துத் தம் ஸ்தானத்திலே அபிஷிக் தராக்கி, அவருக்கு ''மதுரகவி ராமாநுஜ ஜீயர்'' எனத் திருநாமமும் சாத்தியருளிப் பின் நாதன்கோவிலிலேயே திருநாட்டுக்கு எழுந்தருளினார். (14)

## இருபத்தொன்றாவது: மதுரகவி ராமாநுஜ ஸ்வாமி

மதுரகவி ராமாநுஜ ஸ்வாமி கி.பி. 1867 முதல் 1874 முடியப் பீடத்தை அலங்கரித்தார்கள். இவர் நாதன் கோவிலில் திருநாட்டுக்கு எழுந்தருளின தமது ஆசார் யனுக்குச் சரம கைங்கர்யத்தைச் செவ்வனே செய்தருளிப் பின் வானமாமலைக்கு எழுந்தருளினார்.

வானமாமலை தெய்வநாயகப் பெருமாளுக்குத் தங்கத் தகடுகளால் பொதியப்பட்ட வரைகளை உடைய தங்கமயமான தோளுக்கு இனியான் ஒன்றைச் செய்து, அதன் நாற்புறங்களிலும் சடகோப ராமாநுஜ ஸ்வாமி, பட்டர்பிரான் ஸ்வாமி, கலியன் ஸ்வாமி ஆகிய இவர்களு டைய திருவுருவங்களைப் பொலிவு பெற அமைத்து ஸமர்ப்பித்தருளினார்.

ஆழ்வார்திருநகரியில் பழுதுபட்டிருந்த மடத்தை மாற்றி அகலமானதாகவும் பெரியதாகவும் கட்டித் திருப் பணியருளினார்.

திருவரங்கம் பெரிய கோவிலில் திருவேங்கட ராமாநுஜஸ்வாமி செய்தருளிய கைங்கர்யமான திருமணத் தூண்கள் நீண்ட காலம் ஆகியதால் தங்கமூலாம் அழிந்து போக மிகுந்த பொருட் செலவு செய்து மறுபடியும் புதுப் பித்துத் தங்கமூலாத்துடன் பிரகாசிக்கச் செய்தார்.

இந்த ஸ்வாமியும் திவ்ய தேசங்களை மங்களா சாஸனம் செய்யத் திருவுள்ளமாய் யாத்திரைக்குப் புறப் பட்டார். முதலில் ஸ்ரீவில்லிபுத்தூர். அடுத்துச் சோழ தேசத்திலுள்ள அனைத்துத் திவ்ய தேசங்கள். ஸ்ரீபெரும் பூதூர் ஆகிய இடங்களில் எம்பெருமான்களை மங்களா சாஸனம் செய்தருளினார்.

ஸ்ரீபெரும்பூதூரில் முன்பு, பட்டர்பிரான் ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி உடையவருக்குச் செய்து ஸமர்ப்பித்தருளிய வெள்ளியாலான அன்னவாகனம் பழுதுபட்டதைக் கண்டு அதை தங்கத்தாலே செய்து புதுப்பித்துப் பிரதிஷ்டிப்பித் தருளினார். பிறகு, தொண்டைநாடு வழியாகக் கிருஷ்ணா கோதாவரி நதிகளின் மத்ய தேசத்திற்கு எழுந்தருளினார் அங்கிருந்து திருப்பதி, ஸ்ரீரங்கம் வழியாக வானமா மலைக்கு எழுந்தருளினார்.

யாத்ரா காலத்தில் தமக்கு ஸமர்ப்பிக்கப்பட்ட யானைகளில் ஒன்றை ஸ்ரீபெரும்பூதூரில்உடையவருக்கும் மற்றொன்றை ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆண்டாளுக்கும், வேறொன்றை ஆழ்வார்திருநகரியில் நம்மாழ்வாருக்கும், ஸ்ரீவைகுண்டம் பெருமாளுக்காக ஒன்றையும் ஸமர்ப்பித் தருளினார்.

வானமாமலை தெய்வநாயகனுக்கு அழகியதும், மிகுந்த விலையுள்ளதும், எல்லா லக்ஷணங்களும் அமையப் பெற்றதுமான தேர் ஒன்றைச்செய்து ஸமர்ப்பிக்கவேணும்

என்று விரும்பி, தமக்கு மிகவும் அந்தரங்கமாய் இருக்கிற திருக்குறுங்குடி. திருவேங்கடாசாரியார் என்பவரிடம் தேர்த்திருப்பணியை வழங்கியருளினார். அந்தத் திருவேங்கடாசார்யரும் விரைவிலேயே மிக அழகிய திருத்தேரைச் செய்து முடித்தார்.

திருக்குறுங்குடி திருவேங்கடாசாரியர் தம்முடைய சர்வ சொத்துக்களையும் ஜீயர் ஸ்வாமியின் திருவுள்ளத்துக்கு உகப்பாகக் கைங்கர்யங்களிலே விநியோகிக்கும்படிச் செய்ய வேண்டும் என்று நிச்சயித்து ஜீயர் ஸ்வாமியிடம் விண்ணப்பித்துக் கொண்டார். ஜீயர் ஸ்வாமியும் உகந்து அவர் விருப்பப்படி செய்க என்று நியமித்தருளினார். பின்பு அந்தத் திருவேங்கடாசார்யரும் ஒவ்வொரு ஆண்டும் தமக்கு வரும்படியைக் கொடுக்கும் திருக்குறுங்குடி மலை மேலுள்ள தோட்டத்தை. ஜீயர் ஸ்வாமி நியமித்த கைங்கர்யங்களைக் குறிப்பிட்டு. அத்தோட்டத்தின் ஆண்டு வரும்படியைக் கொண்டு அக்கைங்கர்யங்களை நடத்தி வரவேண்டுமென தான சாசன பூர்வமாக ஜீயர் ஸ்வாமியிடமே ஸமர்ப்பித்தார். அதன்படி நடத்தி வரும்படிக் கண்டுள்ள கைங்கர்யங்கள்;-

(1) தெய்வநாயகனுக்குப் பங்குனி உத்ஸவத்தை நன்றாக நடைபெறச் செய்வது.

(2) வானமாமலையிலுள்ள மணவாளமாமுனிகளின் ஐப்பசித் திருமூலத் திருநக்ஷத்திர உத்ஸவத்தை நிலையாகப் பத்து தினங்களிலும் நன்றாகச் செய்து வருவது.

(3) தை மாதம் தெப்போத்ஸவத்தில், அவர் ஏற்கனவே செய்து வந்த ஒரு நாள் உத்ஸவத்தை நன்றாகச் செய்து வருவது.

(4) அந்தத் தோட்டம் இருக்குமிடமான திருக்குறுங்குடி மலையில், மலைமேல் நம்பிக்குப் புரட்டாசி மாதம் அவர் நடத்தி வந்த திருமஞ்சனம், தளிகை, ததீய ஆராதனம் இவைகளைக் குறையாமல் செய்வது.

(5) வானமாமலையில் தெய்வநாயகனுக்குத் திரு

நந்தவனக் கைங்கர்யமும், நித்யார்ச்சனையும் தளிகையும் நிலையாய் நடைபெறச் செய்வது.

(6) நாதன்கோவில் நாதன் சந்நிதியில் நித்ய திரு வாராதனத்துக்கும். பிரம்மோத்ஸவத்திற்கும் உபயோகப் படும்படி ஜீயர் ஸ்வாமி தம் திருவுள்ளத்திற்கேற்றபடி நடத்துவது.

(7) தம் ஆசார்யரான சடகோப ராமாநுஜ ஸ்வாமி யின் தீர்த்தம், திருநக்ஷத்திரங்களில் திருப்பணியாரத் துடன் ததீயாராதனம், தொடக்கம் சம்பாவனைகளை நிலையாக நடத்துவது.

(8) மார்கழி மாதம் பெரிய திருவத்யயன உத்ஸவம் ஏகாதசி அன்று சயன உத்ஸவ சமயத்திலும். அந்த உத்ஸவத்தில் ஐந்தாவது தினமான நோற்ற நோன்பு உத்ஸவ தினத்திலும், ''செந்நெலரிசி சிறுபருப்புச் செய்த அக்காரம் நறுநெய் பாலா''லாகிய அடிசில் அமுது செய் யும்படித் தெய்வநாயகனுக்கு ஸமர்ப்பிப்பது.

(9) ஸ்ரீரங்கம் பெரிய பெருமாளுக்குத் திருத்துழாய் நந்தவனம் ஏற்படுத்திப் பெருமாளுக்கு நித்ய அர்ச்சனை நடத்தும்படியும், அவ்வர்ச்சனை நடக்கும் காலத்தில் அணியரங்கன். ''கோவலனாய் வெண்ணெய் உண்ட வாயன்'' ஆகையாலே நவநீதம் அமுது செய்யும்படி ஸமர்ப்பிப்பது ஆகிய இவைகளாகும். (7)

## இருபத்திரண்டாவது: யோகி ராமாநுஜ ஸ்வாமி

யோகி ராமாநுஜ ஸ்வாமி கி.பி. 1874 முதல் 1883 முடிய ஆஸ்தானத்தை அலங்கரித்தார்கள்.

வானமாமலைப் பெருமாள் தெய்வநாயகனுக்கு மிகவும் ஒளியுடன் கூடியதான மகர கண்டிகையை ஸ்வாமி ஸமர்ப்பித்தார். அதேபோன்று நவரத்தினங்களால் இழைக்கப்பட்ட கிரீடமொன்றைத் தெய்வநாயகனுக்கு ஸமர்ப்பித்தருளினார்.

மணவாளமாமுனிகளுக்குத் தங்கமயமாய்ப் பெரிய தான ஒரு பீடத்தை ஸமர்ப்பித்தருளினார். மேலும், அவருக்கு இரத்தினங்களால் இழைக்கப்பட்ட யஜ்ஞோப வீதமும், திரிதண்டமும் ஸமர்ப்பித்தருளினார். மேலும், மாமுனிகளுக்கு தங்கத்தாலே கண்டபூஷணமும், இரத்தி னங்களால் இழைக்கப்பட்ட அஞ்சலியும், தங்கக் கவசமும் செய்து ஸமர்ப்பித்தருளினார்.

பின்னும், முதலாவது வானமாமலை ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிக்கு (ஒன்றான ஸ்வாமி) எட்டுத் திசை யானைகளாலே அலங்காரப்படுத்தப்பட்ட வெள்ளி வாரை யோடு கூடிய வெள்ளியாலான தோளுக்கு இனியானும், அதன்மேல் எழுந்தருளி இருந்து எடுப்பாகப் பெருமாள் சேவைசாதிக்க வேண்டி தங்கத்தால் உருவாக்கப்பட்டதும் எட்டுத் திசை யானைகளால் அலங்கரிக்கப்பட்டதுமான அழகான பீடம் ஒன்றும் ஸமர்ப்பித்தருளினார். பெரிய வானமாமலை ஸ்வாமிக்கு இரத்தினங்களால் இழைக்கப் பட்ட கிரீடமும், மகர கண்டிகையும், முத்தாரமும் செய்து ஸமர்ப்பித்தருளினார்.

முன்னம், மடத்தில் அரங்கநகர் அப்பன் சந்நிதி மேற்கு முகமாய் இருந்ததும், பழைமையானதாய் மடத் துக்கு மேற்புறம் இருள் சூழ்ந்திருந்ததுமான மண்டபத்தை யும், பெரியரங்கப்பஸ்வாமியின் கைங்கர்யமான கல்யாண மண்டபத்தையும் சேர்த்து ஒன்றாக்கி, மிக அழகாக எடுத் துக் கட்டி, தெற்கு முகமாய் வாசலும், சந்நிதியும் அமை யும்படி செய்வித்தருளினார். இவ்வாறு அலங்காரத்தோடு அகலமான மண்டபத்தைக் கட்டியருளி, அதில் கொல்லம் ஆண்டு 1055-இல் (கி.பி.1880) விக்கிரம ஆண்டு சித்திரை மாதம் சுக்கிலபக்ஷ ஸப்தமி திதியான சுபமுகூர்த்தத்தில் அரங்கநகரப்பனை எழுந்தருளச் செய்து, பிரதிஷ்டையும் செய்தருளினார். அந்தச் சுபதினத்திலேயே அம்மண்டபத் தில் ஸ்ரீவரமங்கையையும் தெய்வநாயகனையும் எழுந் தருளப்பண்ணி, அரங்கநகரப்பனையும் ஏகாஸனத்தில் எழுந்தருளப்பண்ணி ஆராதித்தருளினார்.

ஸ்ரீவரமங்கை நாச்சியாருக்குச் சடை அலங்காரமாய் இரத்தினங்களால் இழைக்கப்பட்ட ஜடைநாகம் ஒன்று ஸமர்ப்பித்தருளினார்.

ஏற்கனவே மரத்தால் கட்டப்பட்டிருந்து பழுதுபட்ட அழகியவரதன் ஸ்தானத்தைச் சிறந்த கருங்கற்களாலே எடுத்துக்கட்டி, அதன் கிழக்குப்பாகத்தில் உயரமுள்ள கல் தூண்களாலே தாங்கப்பட்டதும், வலிமையான படிக்கட்டுகளுடன் கூடியதுமான மண்டபங்களையும் கட்டியருளி. கி.பி. 1881-ஆம் ஆண்டில் சித்திரபாநு ஆண்டு, ஆவணி மாதத்தில் சுபமுகூர்த்தத்துடன் கூடிய சுபதினத்தில் குரு பரம்பரையை முன்னிட்டு அந்த மண்டபத்தில் பிரவேசித்தருளினார்.

ஸ்நான சாலையையும், காலக்ஷேபார்த்தமாக ராமாநுஜ விலாசத்தையும், கோசக் கிருஹத்தையும் கட்டியருளினார். மேலும், தெய்வநாயகன் சந்நிதி முற்றிலும் சுதை வேலைப்பாடுகள் செய்வித்துப் பிரகாசிக்கும்படிச் செய்தார். ஒரு பத்தியாய் இருந்த அழகியமணவாளன் திருமண்டபத்தை நீள அகலமாகக் கட்டியருளினார். மடத்துக்குப் பின்புறத்தில் சுற்றிப் பாதுகாப்பாக மதிள் சுவர் கட்டினார்.

தாமும், தமக்குப் பின் இந்த ஸ்தானத்திற்கு எழுந்தருளக்கூடிய ஸ்வாமிகளும் காலக்ஷேப காலங்களில் எழுந்தருளி இருந்து அருளிச் செய்வதற்கு அநுகூலமாய்த் தங்கத்தாலும், வெள்ளியாலும் இரு பீடங்கள் செய்வித்தருளினார்.

ஆழ்வார்திருநகரியில் நம்மாழ்வாருக்குத் தங்கமயமான வேதிகை செய்து ஸமர்ப்பித்தருளினார். அவ்வாழ்வாருக்கு மகர கண்டிகை உருவாக்குவதற்காக ஏராளமான பொருட்களை அளித்தார்.

திருவாலிதிருநகரியில் திருமங்கை மன்னனுக்குத் தங்க மயமான பத்மாசனம் ஒன்று செய்து ஸமர்ப்பித்தார்.

திருவல்லிக்கேணியில் பார்த்தசாரதி பெருமாளுக்குத் தங்கப்பல்லக்கு ஒன்று செய்து ஸமர்ப்பித்தருளினார்.

காஞ்சீபுரத்தில் மணவாள மாமுனிகள் விஷயத்தில் தர்சன ஸ்தாபனார்த்தமாக ஏராளமான பொருளுதவி செய்தார்.

திருநெல்வேலியில் கரியமாணிக்கப் பெருமாள் சந்நிதி பிரதிஷ்டை செய்வித்தருளினார்:

நாதன்கோவில் பெருமாள் சந்நிதியில் பழுதுப்பட்டு இருந்த திருமதிள்களை எல்லாம் இடித்துப் புதுப்பித்து ஜீரணோத்தாரணம் செய்வித்தார்.

மேலும், மடத்தினுடைய வருமானத்தைப் பெருக்கு வதற்காக வானமாமலைக்குமேல் திசையில் உள்ள மஞ்சங் குளம் என்னும் கிராமத்தை விலைக்கு வாங்கினார். (9)

## இருபத்து மூன்றாவது: சின்ன சடகோப ராமாநுஜ ஸ்வாமி

இந்த ஸ்வாமி கி பி. 1883 முதல் 1896 முடிய அருளாட்சி செய்தார்கள். இந்த ஸ்வாமி ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் சந்நிதி வாசலில் அகல நீளத்துடன் கூடிய மிக அழகான மடத்தைக் கட்டியருளினார்.

வடதேச யாத்திரை செய்ய வேண்டும் என்று திருவுள்ளம் கொண்டவராய் ஸ்ரீவில்லிபுத்தூர் திருமோகூர், திருமாலிருஞ்சோலை, மன்னார்குடி, நாதன்கோவில் கும்பகோணம், சோழ நாட்டிலுள்ள அனைத்து திவ்ய தேசங்கள் ஆகியவற்றிலுள்ள எம்பெருமான்களை மங் களாசாஸனம் செய்து கொண்டு. திருக்கோவிலூருக்கு எழுந்தருளினார். திருக்கோவிலூரில் மடம் ஒன்றை நிறுவியருளினார்.

மதுராந்தகம், மதுரமங்கலம், ஸ்ரீபெரும்பூதூர் ஆகிய இடங்களில் எம்பெருமான்களையும், எம்பார், எம் பெருமானாரையும் மங்களாசாஸனம் செய்வித்து, திருப் பதி திருமலை சோழசிம்ஹபுரம், திருமழிசை, பூவிருந்த

வல்லி, மயிலை, திருவல்லிக்கேணி, ஸ்ரீபெரும்பூதூர், காஞ்சீபுரம், திருபுட்குழி, பெங்களூர், ஸ்ரீரங்கப்பட்டணம் முதலிய இடங்களில் மங்களாசாஸனம் செய்து அடை விலே திருநாராயணபுரம் எழுந்தருளினார். பிறகு பெல் லாரி, வனப்பருத்தி நாட்டிலுள்ள ஸ்ரீரங்கராஜபுரம், ஆத் மக்கூர் வழியாக ஹைதராபாத் எழுந்தருளினார். பிறகு அநுமகொண்டா, மட்டவாடா, சோபநாத்ரி, நூஜ்வேடு சனிவாரப்பேட்டை, கோதாவரியைக் கடந்து மீடாபுரம் நெல்லூர் வழியாகத் திருவல்லிக்கேணிக்கு எழுந்தருளி னார். அங்கிருந்து மாமல்லபுரம், புதுச்சேரி வந்து, அங்கு ஒரு மடத்தைக் கட்டியருளினார். அங்கிருந்து ஸ்ரீமுஷ்ணம் காட்டுமன்னார்குடி, நாதன்கோவில், மன்னார்குடி ஆகிய இடங்களில் உள்ள எம்பெருமான்களை மங்களாசாஸனம் செய்துகொண்டு, ஸ்ரீரங்கம் எழுந்தருளி, அங்கிருந்து மீண்டும் வானமாமலைக்கு வந்தருளினார்.

ஜீயர் ஸ்வாமி தமக்கு வெகுமானமாக வந்த யானைகளில் ஒன்றை ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீகள்ளபிரான் சந்நிதிக்கு ஸமர்ப்பித்தார்.

யாத்திரையில் கிடைத்துச் சேமித்த பொருளைக் கொண்டு மலையடிப்புதூர், கோபாலம்மாள்புரம் என்ற இரண்டு கிராமங்களை மடத்தின் வளர்ச்சிக்காக வாங்கி அருளினார்.

சிலநாட்கள் சென்றபின் ஸ்ரீவரமங்கையும் தெய்வ நாயகனும் உத்ஸவத்தில் எழுந்தருளும்படி தங்கத்தாலே ஒரு தேர் செய்விக்கத் தீர்மானித்து, நல்ல தேக்கு மரங் களைக் கொண்டு மரவேலைகளைப் பூர்த்தி செய்து முடித்து, தாமிரத் தகடுகளையும் வேலைப்பாட்டுடன் கூடியதாகச்செய்து, மரத்துடன் இசைவித்து அந்த வேலை களும் பூர்த்தியாகி விட்டன. மேலே தங்கமுலாம் பூச ரேக்குகள் அடிக்க வேண்டியதற்காகத் தங்கம் அதிகம் வேண்டி இருந்ததால், அதைத் திரட்ட ஏற்பாடும் செய்த ருளினார். இதன் நடுவில் கோவில் விமானப் பிரதிஷ்டை நடக்க, அதற்காக ஏராளமான பொருட்களை ஸமர்ப்பித்

தருளினார். ஆனால் தேர்ப்பணி முழுமையாகும் முன்னரே ஜீயர் ஸ்வாமி திருமேனியில் நோவுசாத்தி எழுந்தருளி இருந்தார்.

தங்கத்தேர் முழுமையடையாமலேயே ஜீயர் ஸ்வாமி திருநாட்டுக்கு எழுந்தருளினார். (13)

## இருபத்து நான்காவது: சின்ன பட்டர் பிரான் ஸ்வாமி

சின்ன பட்டர்பிரான் ஸ்வாமி கி பி. 1896 முதல் 1905 முடிய ஆஸ்தானத்தை அலங்கரித்தார்கள். இந்த ஸ்வாமியின் அருளாட்சிக் காலத்தில் யார் யார் எப்பொழுது வரினும் சலியாமல் அன்புடன் அவர்களுக்கு அன்னம் அளித்து வந்த பெருமை அளவிடற்கரியது. இந்த ஸ்வாமி சமஸ்தானத்தில் எழுந்தருளி இருந்த ஒன்பது ஆண்டுகளிலும் ஓர் ஆண்டாவது பஞ்சம் இருந்த தில்லை. தீங்கின்ற நாடெல்லாம் திங்கள் மும்மாரிபெய்தது சேற்றுத்தாமரைக்குளம் எப்பொழுதும் தண்ணீர் நிறைந்து திருமதிள்களில் அலைகள் மோதும் ஒலி கேட்டுக் கொண்டே இருந்தது.

இந்த ஸ்வாமியின் ஆசார்யரான சின்ன சடகோப ஸ்வாமி அவர்களால் பூர்த்தியாகாமல் இருந்த தங்கத் தேரை இந்த ஸ்வாமி பூர்த்தி செய்து. அந்தத் தங்கத் தேரில் ஸ்ரீவரமங்கை மணாளனை எழுந்தருளுவித்துத் தாமும் சேவித்து. அடியார்களையும் மகிழ்வித்து. தமது ஆச்சார்யனின் மனோரதத்தைப் பூர்த்தி செய்து அருளினார்

ஆழ்வார் திருநகரியில் நம்மாழ்வாருடைய விமான கலசம் பழுதுபட்டிருப்பதைக் கண்டு. மிகுந்த பொருட் செலவு செய்து. அது என்றும் அழியாமல் இருக்கும் வண்ணம் பிரகாசிக்கச் செய்து, பிரதிஷ்டையும் செய்து அருளினார்.

வானமாமலைப் பெருமாள் சந்நிதியில் ஸ்ரீசடாரி யிலிருந்த நம்மாழ்வாருடைய விக்ரகம் பழுதுபட்டிருந்

தமையால், அதனை முழுத் தங்கத்தில் உருவாக்கி, சாஸ்திர முறைப்படிப் பிரதிஷ்டையும் செய்வித்தருளினார்.

இந்த ஸ்வாமி தாமிரவருணி நதிக்கரையில் உள்ள அத்தாழநல்லூரில் சாதுர்மாஸ்ய விருதத்தைச் செய்து அருளினார்கள்.

இவ்வாறு மடத்திலும், சந்நிதியிலும் கைங்கர்யங்களைக் குறைவின்றி நடத்தி வைத்ததுடன், வானமாமலைக்குப்பக்கத்தில் சுமார் இரண்டு லக்ஷம் ரூபாய் விலை கொடுத்து நிலங்களை வாங்கி வைத்து, கைங்கர்யங்கள் மேலும் குறைவின்றி நடைபெற வகை செய்தருளினார்.

மேலும், இந்த நன்னாட்களில் ஜீயர் ஸ்வாமி தெய்வநாயகனுக்குப் பெரிதான தங்கக் குடங்கள் இரண்டையும், தங்க மயமான கலசங்களையும் செய்து ஸமர்ப்பித்தருளினார். மேலும், ஒரு பெரிய வெள்ளிக்கொப்பரையையும்,சங்கநிதி பதுமநிதிகளையும்ஸமர்ப்பித்தருளினார்

கண்ணாடிச் சப்பரம் ஒன்றும் கண்ணாடி ஊஞ்சல் ஒன்றும் செய்வித்துத் தெய்வநாயகனை எழுந்தருளச் செய்து கண்டு களிப்புற்றருளினார்.

தம்முடைய இறுதி நாட்களுக்குள் சேற்றுத் தாமரையின் மேற்குக் கரையில் திருவேங்கடமுடையானுக்கு ஒரு சந்நிதி கட்டிச் சேவிக்க வேண்டும் என்று திருவுள்ளம் பற்றினார். மணி மண்டபம், அர்த்த மண்டபம், மஹா மண்டபம், பெரிய மடைப்பள்ளி ஆகியவை கொண்ட ஒரு சந்நிதியை நூற்றுக்கணக்கான சிற்பிகளின் முயற்சியால் உருவாக்கியருளினார். இந்த சந்நிதி சோலைகளால் சூழப்பட்டிருக்கவேண்டும் என்ற கருத்தோடு ஏராளமான மரங்களை உண்டாக்கியருளினார். மேலும், அந்தச் சந்நிதிக்கு விஜயதசமி, சைத்ரோத்ஸவத்தில் விடாயாற்றி முதலிய சில உத்ஸவங்களில் தெய்வநாயகன் அங்கு எழுந்தருளி மண்டகப்படி, கோஷ்டி முதலியன நடைபெறும்படியும் ஏற்பாடுகளைச் செய்தருளினார்.

தமது திருமேனி தளர்வதை அறிந்து, தக்கார் ஒருவரை ''கலியன் ராமாநுஜன்'' என்ற திருப்பெயரோடு தமது வாரிசாக நியமித்தருளினார். (9)

## இருபத்தைந்தாவது: ஸ்ரீகலியன் ராமாநுஜ ஸ்வாமி

ஸ்ரீகலியன் ராமாநுஜ ஸ்வாமி கி.பி. 1905 முதல் 1933 முடியப் புகழோடு அருளாட்சி செய்தார்கள். ஸ்ரீபட்டர்பிரான் ஸ்வாமி திருமேனி தளர்ந்ததால் இந்த ஸ்வாமியை அழைத்து, ''இனி நீரே நமது ஸ்தானத்தை அலங்கரித்து ஸ்ரீராமாநுஜ சித்தாந்தத்தைத் தழைக்கச் செய்வீர்'' என அனுக்ரகித்து, உத்தமாச்ரம ஸ்வீகாரத்தையும் செய்வித்தருளினார். கலியன் ஸ்வாமி தம் இருபத்தெட்டாவது திருநக்ஷத்திரத்தில் துரியாச்ரமத்தை ஸ்வீகரித்தருளி அபிஷித்தரானார்.

எங்கும் ராமாநுஜ தர்சனம் தழைத்தோங்கும்படிச் செய்ய வேண்டும் என்றும், உகந்தருளின திவ்ய தேசங்களை மங்களாசாஸனம் செய்ய வேண்டும் என்றும் திருவுள்ளம் பற்றினார். கோவில், திருமலை, பெருமாள் கோவில் முதலிய திவ்ய தேசங்களை மங்களாசாஸனம் செய்தருளி பூரி, ஜகநாதம் வரையிலும் எழுந்தருளி மூன்று ஆண்டுகள் யாத்திரை செய்து, மீண்டும் வானமாமலையில் வீற்றிருக்கலானார்.

ஒரு சமயம் ஸ்ரீவரமங்கை இவருடைய யோக நிலையில் தோன்றி வடதேசயாத்திரையை மேற்கொள்ள ஆணையிட்டாள்.ஸ்வாமிஅந்தஆணையை மேற்கொண்டு அடுத்த யாத்திரையைத் தொடங்கினார்.

கலியன் ஸ்வாமி அடியார்கள் புடைசூழத் திருவண்பரிசாரம், திருவட்டாறு வழியாகத் திருவனந்தபுரம் மார்க்கமாக மங்களாசாஸனம் செய்தருளினார். கேரள மன்னன் மூலம் திருநாள் அங்கு வந்து ஸ்வாமியின் கிருபா கடாக்ஷத்தால் வசீகரிக்கப்பட்டு, ஜீயர் ஸ்வாமியினுடைய

நித்யபிக்ஷைக்குத் தமது படித்தனத்தால் நடக்க வேண்டும் என்று பிரார்த்திக்க, ஸ்வாமியும் உவந்து அங்கீகரிக்க, அது இன்றளவும் நடந்து வருகிறது. பிறகு பூப்ரதக்ஷண மாக அங்குள்ள மலையாள திவ்ய தேசங்களை சேவித்து திருநாராயணபுரம் எழுந்தருளி, மங்களாசாஸனம் செய்து கொண்டு கிஷ்கிந்தை, மால்யவான். மலைகளுக்கு எழுந் தருளி, அங்கு ஸ்ரீராமபிரான் எழுந்தருளி இருந்த இட மெல்லாம் சேவித்து, ஹைதராபாத் (பாக்யநகரம்) வழி யாகப் பஞ்சவடிக்கு (நாஸிக்) எழுந்தருளினார். பிறகு அங்கிருந்து வடநாடு சென்று நர நாரணனாய் நின்று திரு மந்திரம் வெளியிட்டருளிய திவ்ய தேசமான வதரியை வணங்கி புஷ்கரம். நைமிசாரண்யம். காசி. கல்கத்தா. அயோத்தி. துவாரகை முதலான வடநாட்டுத் திருப்பதி களையெல்லாம் சேவித்து விஜயநகரம், பித்தாபுரம், நூஜ வீடு, ஸ்ரீகூர்மம். சிம்மாசலம் முதலான க்ஷேத்திரங்களை சேவித்து திருமலை, ஸ்ரீபெரும்பூதூர் மார்கமாக திருவரங் கம் எழுந்தருளினார். அங்கு நின்றும் புறப்பட்டு திருமாலி ருஞ்சோலை சுந்தரத்தோளனை மங்களாசாஸனம். நூறு தடா நிறைந்த அக்கார அடிசில் ஸமர்ப்பித்து, அதை விண்ணப்பம் செய்ய நாச்சியார் திருமாளிகையான ஸ்ரீவில்லிபுத்தூருக்கு எழுந்தருளி ஆண்டாளையும் ரங்க மன்னாரையும் மங்களாசாஸனம் செய்து வானமாமலை யேற எழுந்தருளினார்.

பிறகு ஜீயர் ஸ்வாமி பலமுறை ஆழ்வார் திருநகரிக்கு எழுந்தருளி ஆதிநாதரையும், ஆழ்வாரையும் மங்களா சாஸனம் செய்தருளினார். இந்த சமயத்தில் வீரகேரளம் பூதூரில் ஸ்ரீநவநீதக்கிருஷ்ண ஸ்வாமி திருக்கோவிலில் நடந்த தங்கக் கொடிமரப் பிரதிஷ்டைக்குத் தலைமை வகித்து நடத்தியருளினார்.

இவ்வாறு பத்தாண்டுகள் கழிய, இதுவரை தமது திரு வடிகள் படாத கிராமங்கள். நகரங்கள் ஆகிய இடங்களு க்குச்சென்று மங்களாசாஸனம் செய்ய ஜீயர் ஸ்வாமி திரு வுள்ளம் பற்றி ஹைதராபாத் வரை சென்று திரும்பினார்.

யாத்திரையில் தாம் சேமித்த ஸ்வர்ணங்களையும் செல்வங்களையும் கொண்டு பொன்மலைக்கு ஒப்பான "புண்ய கோடி விமானம்" என்னும் தங்கச் சப்பரம் பண்ணி ஸமர்ப்பித்து, ஸ்ரீதெய்வநாயகனையும், ஸ்ரீவரமங்கைத் தாயாரையும் எழுந்தருளப்பண்ணி சேவித்து க்ருதக்ருத்யரானார் ஸ்ரீமடத்தின் வெள்ளி விழாக் கொண்டாட்டம் போல் இருபத்தைந்தாவது பட்டமாக எழுந்தருளி 25 வருடம் ஆஸ்தானத்தை அலங்கரித்து. உள்ளூரிலும் வெளியூர்களிலும் ஸ்ரீஸ்வாமிசெய்துள்ள கைங்கர்யங்கள் சொல்லில் அடங்கா அவருடைய ஆட்சிக்காலம் மடத்தின் பொற்காலம் என்றே கூறலாம். அவர் செய்துள்ள கைங்கர்யங்கள் பின்வருமாறு:-

1) ஸ்ரீரங்கத்தில் திருமணத்தூண் ஜீரணோத்தாரணம் செய்து தங்கமுலாம் பூசினார்.

2) ஸ்ரீரங்கம் வானமாமலை மடத்தை ரூபாய் ஏழாயிரம் செலவில் திருப்பணி செய்தார்.

3) ஆழ்வார்திருநகரியில் பழைய மடத்தை ரூபாய் ஆறாயிரம் செலவில் ஜீரணோத்தாரணம் செய்தார்.

4) பட்டர்மடத்தை ரூபாய் ஐயாயிரத்துக்குப் புதியதாய் வாங்கினார்.

5) திருநெல்வேலி மடத்தை ரூபாய் பன்னீராயிரம் செலவில் திருப்பணி செய்தார்.

6) வடகரை மடத்தைத் திருப்பணி செய்தார்.

7) ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் சந்நிதிக்கு யானை ஒன்றை ஸமர்ப்பித்தார்.

8) ஸ்ரீவில்லிபுத்தூர் பிரதிஷ்டையில் ஏழு நாட்கள் முடிய ததீயாராதனம் நடத்தினார்.

9) நாதன்கோவில் நாதன்சந்நிதியில் திருவாபரணங்கள் வெள்ளிப் பாத்திரங்கள், நித்தியோத்ஸவ ததீயாராதனங்கள், சந்நிதி மடம் ஜீரணோத்தாரணங்கள் ஆகியவற்றை நிகழ்த்தினார்.

10) மேற்படிச் சந்நிதியில் ரூபாய் எட்டாயிரம் செலவில் மகாப்பிரதிஷ்டையைச் சிறப்பாகச் செய்வித்தார்.

11) நாச்சியார் கோவிலில் திருவாபரணம் செய்வதற்கு ரூபாய் இரண்டாயிரம் உதவினார்.

12) ரூபாய் இரண்டாயிரத்தில் மன்னார்குடி மடம் ஜீர்ணோத்தாரணம் ஆயிற்று.

13) அம்பாசமுத்திரம் அருகில் உள்ள மன்னார்கோவிலில் பிரதிஷ்டைக்கு விசேஷ உதவி செய்தார்.

14) அத்தாழநல்லூர் மகாபிரதிஷ்டைக்கும் மற்ற அனைத்துச் செலவுக்குமாக ரூபாய் ஐயாயிரம் செலவு செய்தார்.

15) தூத்துக்குடி வைகுண்டபதி சந்நிதிப் பிரதிஷ்டை, ததீயாராதனம் முதலியன.

16) திருக்குறுங்குடி வானமாமலை மடம் ஜீரணோத் தாரணம்.

17) ஸ்ரீபெரும்பூதூர் மடம் ஜீரணோத்தாரணம்.

18) ரூபாய். 17000 செலவில் திருவல்லிக்கேணி மடம் புதிதாகக் கட்டப்பட்டது.

19) ரூபாய். 1500 செலவில் நெல்லூர் மடம் ஜீரணோத் தாரணம்.

20) நூஜ்வீடு மடம் ஜீரணோத்தாரணம்.

21) ஸ்ரீரங்கம், திருப்பதி, காஞ்சீபுரம் ஆகிய இடங்களில் தர்சன ஸ்தாபனார்த்தமாக ரூபாய். 12000 உபகரித் தருளினார்.

22) ஆர்குல் (நைசாம்) சந்நிதி பிரதிஷ்டை

23) ஆரா ஜில்லாவிலுள்ள குன்றிசந்நிதிக்கு ரூபாய்.5000 உபகரித்து சந்நிதியையும், நிருவாகத்தையும் ஏற்று நடத்தி வருவது.

24) நைமிசாரண்யம் சந்நிதி பிரதிஷ்டைக்கு முழுச் செலவும் ஏற்கப்பட்டது.

25) மால்யவான் கிஷ்கிந்தையில் கோவில் முதலியவை களை ருபாய். 2000 உபகரித்து நிருவகித்தருளியது

26) திருநாராயணபுரம் மடம் ஜீரணோத்தாரணம்.

27) பம்பாயில் தோத்தாத்ரி ஸ்தானம் ஒன்று ஏற்படுத்தியது.

28) துவாரகையில் தோத்தாத்ரி ஸ்தானமும், மண்டபமும் செய்வித்தது.

29) காசி ராஜ்காட்டில் மிகுந்த வசதியுடன் கூடிய தோத்தாத்ரி ஸ்தானத்தை ஸ்தாபித்தது.

30) பிருந்தாவனம், மதுரா, அயோத்தி, ஹரித்துவார், ஹ்ருஷிகேசம், கான்பூர், பிரயாகை முதலிய இடங் களில் தோத்தாத்ரி ஸ்தானங்களைப் புதிதாக ஸ்தாபித்தருளியது முதலியன.

வானமாமலையில் ஸ்வாமி

செய்தருளிய கைங்கர்யங்கள்.

1) பிரபையுடன் கூடிய தோளுக்குஇனியான்(மங்களகிரி)

2) பிரபையுடன் கூடிய தோளுக்கு இனியான்-வெள்ளித் தண்டையங்களுடன்

3) ஸ்வர்ணஸ்ரீ வைகுண்ட விமானம்

4) பெரியபெருமாளுக்குத் தங்க மயமான ஐந்து தலை ஆதிசேஷன்

5) தங்கக் குத்துவிளக்கு

6) தங்கத் திருப்படிகம்

7) தங்கத்தில் திருக்காவேரி

8) ஸ்ரீவரமங்கைக்கு ஐந்து பொன்வட்டில்கள்

9) தங்க வட்டக்கும்பா

10) தங்கக் கற்பூரத் தட்டு

11) மடத்திலுள்ள அரங்கநகரப்பனுக்குத் தங்கவட்டில்கள் ஐந்து

12) அரங்கநகரப்பனுக்குப் பொன் கற்பூரத் தட்டு

13) தங்கம் வெள்ளி இழைத்த திருமஞ்சனப் பெரிய மசேரி

14) பெரிய பெருமாளுக்கு முழுப்பவுன் மாலை

15) தாயாருக்குக் கற்களால் இழைக்கப்பட்ட பெரிய மாங்காய் மாலை

16) தாயாருக்குப் பெரிய பவுன் மாலை

17) ரிவா மகரகண்டிகை

18) பெரிய பெருமாளுக்கு வைரத் திருமண் காப்பு

19) தாயாருக்குத் தோடு சுட்டிகை பதக்கம் முதலிய வைரத் திருவாபரணங்கள்

20) சிறிய திருவாபரணங்களாகப் பல சாத்தினார்

21) தங்கமயப் புண்யகோடி விமானம்

22) பட்டுப் பீதாம்பரங்கள் அநேகம்

### வானமாமலையில் ஜீயர் ஸ்வாமியின் திருப்பணிகளும், பிரதிஷ்டைகளும்

1) வாகனங்கள் வைக்கும் மண்டபம்

2) வீரப்பநாயக்கர் மண்டபம் தளவரிசை

3) ஸ்ரீபலி மண்டபத்தில் சில பாகங்கள் தளவரிசை

4) திருவுண்ணாழி பிரதக்ஷணம் முழுவதும் தளவரிசை

5) உடையவர், மணவாளமாமுனிகள் சந்நிதிகள் மண்டபங்கள் தளவரிசை

6) கொடிமரத்தடி முதலிய இடங்களில் தளவரிசை

7) ஸ்ரீவைகுண்டம் திவ்ய விமானம் ரூபாய். 50000 செலவில் பிரதிஷ்டை

8) ரூபாய் எட்டாயிரம் செலவில் ஸ்ரீகிருஷ்ணன் சந்நிதி கட்டிப் பிரதிஷ்டையும் செய்வித்தது

9) உபயநாச்சிமார் ஜடிபந்தன பிரதிஷ்டை

10) ரூபாய் பத்தாயிரம் செலவில் தெற்குத் திருவேங்கடமுடையான் சந்நிதிப் பக்கத்தில் கடைகள் கட்டி அருளினார்.

11) ரூபாய் ஐயாயிரம் செலவில் சேற்றுத் தாமரையின் உள்ளிருக்கும் தடாகத்தில் தூரு எடுத்து ஜீரணோத் தாரணம் செய்தது

12) ரூபாய் இரண்டாயிரத்தில் எண்ணெய்க் கிணறு ஜீர ணோத்தாரணம்

13) வருஷம் ஒன்றுக்கு ரூபாய் ஆயிரம் செலவில் உபய வேதாந்தப்பாடசாலை ஒன்றும், வேதாத்யயநப் பாட சாலை ஒன்றும் நடத்தச் செய்தது

14) ஒவ்வொரு ஆண்டும் முதலாவது ஸ்வாமியின் உத்ஸ வத்தை முன்னிட்டுப் பல இடங்களில் இருந்தும் வித் வான்களை வரவழைத்து வித்வத் ஸபையையும், தேர்வுகளையும் நடத்தி ஸன்மானம் அளித்தும், விசேஷ ததீயாராதனங்களை நடத்தியருளினார்.

15) அநேக விதமான எண்ணிறந்த புத்தகங்களை வர வழைத்துப் பெரிய புத்தக சாலையையும், ஆயுர்வேத ஔஷத சாலையையும் அமைத்தார்.

16) ஆண்டாளுக்கு ஆடி மாதத்தில் பத்து நாட்கள் உத் ஸவத்தைப் புதிதாக நடத்தினார்.

ஜீயர் ஸ்வாமியின் திருமேனி தளர்வு எய்திய தனால், அடுத்துத் தகுந்த ஒரு ஸ்வாமியை ஜீயராக நியமனம் செய்தருளிச் சில காலங்களில் திருநாட்டை அலங்கரித்தார். (28)

## இருபத்தாறாவது: ஸ்ரீமதுரகவி ராமாநுஜ ஸ்வாமி

இந்த ஸ்வாமி கி.பி. 1933 முதல் 1939 முடியப் பீடத்தை அலங்கரித்தார்கள்.

சைத்ரோத்ஸவத்தில் தெய்வநாயகன் திருவீதி வலம் எழுந்தருளிய விடாய்ஆற்றுகைக்கு மடத்தின் பூர்வபாகத்தில் ஒரு திருமண்டபத்தை அமைத்தார்.

கோடைத் திருநாட்களில் தெய்வநாயகன் நாச்சி மார்களுடன் மணிமண்டபத்தில் மூன்று மாத காலங்

களுக்கு எழுந்தருளி இருக்கும் மரத்தாலான மஞ்சத்திற்கு வெள்ளிக் கவசம் பதித்தருளினார்.

ஸ்ரீகலியன் ஸ்வாமியால் வெகுகாலமாய் விரும்பியபடி, ஸ்ரீபத்ரிநாராயணனுக்கு வெள்ளி மஞ்சமும், கர்ப்பக்ருஹ த்வாரஸ்தம்பங்களுக்கு வெள்ளிக் கவசமும் ஸமர்ப்பித்துத் தமது ஆசார்யனின் மனோரதத்தைப் பூர்த்தி செய்தார். (6)

## இருபத்தேழாவது: சின்ன ராமாநுஜ ஸ்வாமி

சின்ன ராமாநுஜ ஸ்வாமி கி.பி. 1939 முதல் 1980 முடிய 41 ஆண்டுகள் அருளாட்சி செய்தார். இந்த ஸ்வாமி யாத்திரையாகப் புறப்பட்டு ஸ்ரீவில்லிபுத்தூர் மார்க்கமாக மதுரை, திருமாலிருஞ்சோலை, திருப்புல்லாணி, திருவணை முதலானவைகளை சேவித்துக்கொண்டு திருவரங்கம் வழியாக சோழ நாட்டுத் தலங்களையும் சேவித்து, பெரும்பூதூர் மாமுனியை வணங்கி திருவல்லிக்கேணி எழுந்தருளி, சாதுர்மாஸ்யஸங்கல்பமாக இரண்டு மாதங்கள் சென்னை நகரில் எழுந்தருளியிருந்தார். பின்னர், ஆந்திர தேசமார்க்கமாக பெங்களூர் சென்றார். திருநாராயணபுரம் சென்று செல்வப்பிள்ளையை சேவித்து, சேலம், கோயம்புத்தூர், ஈரோடு, வழியாக திருவரங்கம் சேர்ந்தார். அங்கு அணியரங்கன் திருமுற்றத்தடியார்களுடன் அரங்கன் அடியிணை தொழுது, நேரே வானமாமலை எழுந்தருளினார். ஸ்ரீஸ்வாமி வித்வத்வரிஷ்டராக எழுந்தருளியிருந்தபடியால் ஆண்டு தோறும் கன்யாபுனர்வஸுவில் வித்வத் ஸதஸ்ஸை நடத்தி அடியார்களை ஆனந்திப்பித்தது குறிப்பிடத்தக்கது.

இந்த ஸ்வாமி நான்கு தடவைகள் ஆழ்வார்திருநகரிக்கும், நவதிருப்பதிகளுக்கும் யாத்திரை சென்று மங்களாசாஸனம் செய்தருளினார். இந்த ஸ்வாமி செய்த கைங்கர்யங்கள் வருமாறு:

1) வானமாமலைப் பெருமாள் கோவில் பெருமாளுடைய ஸ்ரீவைகுண்ட விமானத்தையும், உபய நாச்சிமார்களுடைய விமானங்களையும் புதுப்பித்தருளினார். ஸ்ரீவைகுண்ட விமானத்தின் கலசத்தை மீண்டும் மெருகிட்டுத் தங்கக் கலசத்துடன் பிரகாசிக்கச் செய்தார்.

2) ஸ்ரீவரமங்கை, தெய்வநாயகப் பெருமாளுக்கு அழகிய வெள்ளி ஊஞ்சல் சப்பரமும், வேலைப்பாடுகளுடன் கூடிய வெள்ளித்தோளுக்கினியானும் ஸமர்ப்பித்தார்

3) தெற்குத் திருவேங்கடமுடையான் சந்நிதியில் வெகு நாட்களாகப் பழுதுபட்டிருந்த விமானம் திருமதிள்கள் உள்ளிட்ட பல பாகங்களையும் செப்பனிட்டு மகா சம்ப்ரோக்ஷணமும் செவ்வனே நடத்தியருளினார்.

4) பெரிய கோவிலிலும், மணி மண்டபம், ஆழ்வார் சந்நிதிகள், ஆசார்யர்களின் சந்நிதிகள், இவைகளின் தரையில் கருங்கல் தளவரிசை செய்தும், அவ்வவ்விடங்களில் காற்று வெளிச்சங்களுக்காக சாளரங்களை அமைக்கச் செய்தும் அமைத்தருளினார். பெரிய பிராகாரத்தில் நந்தவனங்களை அமைத்துப் பெருமாளுக்குத் திருத்துழாய், புஷ்பங்கள், குறைவறக் கிடைக்கும்படி ஏற்படுத்தியருளினார்.

5) தெய்வநாயகனுக்கும், தேவிமார்களுக்கும், தங்கக் கவசங்கள் சாத்தியருளினார்.

6) தெய்வநாயகனுக்குச் சாத்தின தங்கக்கவசத்தில் பல வைரக்கற்களைப் பதிப்பித்தும், அவருடைய கிரீடத்தில் விலையுயர்ந்த கற்களைப் பதிப்பித்தும் அவ்வாறே அபய ஹஸ்தங்களிலும் வைரக் கற்களைப் பதிப்பித்தும் அருளினார்.

7) தெய்வநாயகன், ஸ்ரீவரமங்கைத் தாயார் உபய நாச்சிமார்கள் ஆகியோர் திருமஞ்சனம் கொண்டருளும்படி திருமஞ்சன வேதிகையைத் தங்க மயமாக்கினார்.

8) மடத்தின் செல்வத்தைப் பெருக்கும் உத்தேசத்துடன் தாமரைக்குளம் என்னும் இடத்தில் நஞ்சை விளை நிலம் வாங்கி வைத்தருளினார்.

9) சந்நிதி மடைப்பள்ளியின் அருகில் ஒரு புதிய மண்டபம் கட்டி, ஒரு கிணறும் தோண்டி அருளினார்.

10) மடத்தில் அரங்கநகரப்பன் சந்நிதி, பெரிய மண்டபம் அழகியவரதன் மண்டபம், காலக்ஷேபக் கூடம், திரு மடைப்பள்ளி ஆகிய இடங்களில் மின்சார விளக்கு களை அமைத்தார்.

11) அதே போலக் கோவிலில் பெருமாள் சந்நிதியிலும், பிற இடங்களிலும் தொண்டர்கள் நன்கு சேவித்துக் களிக்க மின்சார விளக்குகளை அமைத்தார்.

வெளியூர்களில் ஜீயர் ஸ்வாமியால்
செய்யப்பட்ட கைங்கர்யங்கள்:

1) ஆழ்வார்திருநகரியில் நம்மாழ்வாருக்கு ஒரு லட்சம் ரூபாய் செலவில் தங்கம், வெள்ளிகளால் அமைக்கப் பட்ட திருத்தேர் ஒன்றைச் செய்வித்து ஸமர்ப்பித் தருளினார்.

2) சோழநாட்டிலுள்ள திருஇந்தளூரில் இருக்கும் பழமை யான மடம் முற்றிலும் இடிந்து விட்டபடியால் அதே இடத்தில் ரூபாய் பதினாயிரம் செலவு செய்து புதி தாகவே மடத்தைக் கட்டியருளினார்.

3) திருநாங்கூர் திவ்யதேசத்தில் பதினோரு கருடசேவை உத்ஸவத்தில் திருமங்கை மன்னனும், பதினோரு எம்பெருமான்களும் ஏககாலத்தில் எழுந்தருளியிருக் கும்படி மணிமாடக்கோவில் சந்நிதியில் கட்டப்பட்ட மண்டபக் கைங்கர்யத்திற்கு ஏராளமான பொருள் கொடுத்து உபகரித்தார்,

4) திருவல்லிக்கேணி மடத்தில் சில பாகங்களைப் புதி தாகக் கட்டியும், சிதைந்த இடங்களைப் புதுப்பித்தும் பழுதுகளைத் திருப்பணி செய்தும் அருளினார்.

5) காஞ்சீபுரம், ஸ்ரீபெரும்பூதூர் மடங்களிலும், பல இடங்கள் பழுது நீக்கப்பட்டன.

6) நூஜ்வீடு நகரத்தில் பழைய மடத்துக் கட்டிடங்களைப் பல்லாயிரம் ரூபாய் செலவு செய்து சகல வசதிகளுடன் கூடியனவாக அவற்றைத்திருத்தி அமைத்தருளினார்

7) இதுவரை வெளிவராத ஸ்ரீவரமங்கை முநி வைபவம் ப்ரபத்தி மங்களாசாஸனங்கள் (உரையுடன் கூடியது) சுகநகிரிமுநி, குருபரம்பரா ப்ரபாவம், வரண பஞ்ச விம்சதி, ஆகிய நூல்களையும், மணவாளமாமுனிகள் வியாக்யானத்தோடு தத்வத்ரையத்தையும் மடத்தின் வெளியீடுகளாக வெளியிட்டருளினார். (41)

## இருபத்தெட்டாவது: சின்ன சடகோப ராமாநுஜ ஸ்வாமி

சின்ன சடகோப ராமாநுஜ ஸ்வாமி கி.பி. 1980 முதல் 1989 முடிய அருளாட்சி செய்தார்கள். ஸ்ரீவில்லி புத்தூருக்கு அருகிலுள்ள வடகரை அக்ரஹாரத்தில் அழகிய சிங்கர், செங்கமல நாச்சியாரின் திருக்குமாரராகத் தோன்றிய இவர், இளம்பருவம் முதலே சம்பிரதாயத்தில் பற்று மிகுந்து ஸ்ரீவானமாமலை மடம் சின்னக்கலியன் ராமாநுஜ ஜீயரிடம் திருவிலச்சனையைப் பெற்று சம்பிரதாய அர்த்தங்களைக் கேட்டார். காரப்பங்காடு ஸ்ரீ.உ.வே சிங்கப்பெருமாள் ஸ்வாமியிடம் ஐந்தாண்டுகள் உபய வேதாந்த கிரந்த காலக்ஷேபம் செய்தார். காஞ்சீபுரம், திருவரங்கம், திருவல்லிக்கேணி முதலிய திவ்ய தேசங்களில் உள்ள வானமாமலை மடங்களின் பொறுப்பு ஏற்று, நிர்வஹித்து வந்தார். மணவாளமாமுனிகளின் 600-ஆவது ஆண்டு விழாவை முன்னிட்டு ஸ்ரீவில்லிபுத்தூரில் உபந்நியாசம் நிகழ்த்தி வருகையில் வானமாமலை 27-ஆவது பட்டம் சின்ன ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி இவரைத் திருக்கண் நோக்கி 27-10-1970 அன்று சின்ன ஸ்வாமியாக (இளவரசாக) அபிஷேகம் செய்தார். 1980-இல் பெரிய ஸ்வாமி திருநாடு அலங்கரித்ததும் சின்ன சடகோப ஸ்வாமி 28-ஆவது பட்டம் ஸ்ரீவானமாமலை ஜீயர் ஸ்வாமியாக அபிஷேகம் செய்யப்பட்டார்.

*ஜீயர் ஸ்வாமியின் யாத்திரை விஜயம்:*

சின்ன சடகோப ராமாநுஜ ஸ்வாமி வானமாமலைப் பெருமாள், தாயார் அனுக்ரஹத்துடன் அகில பாரத யாத்ரையை 6-2-81 அன்று தொடங்கினார்கள். இந்தத் திவ்யதேச யாத்ரைக்கு டி.வி.எஸ் நிறுவனமும், அதன் அதிபர்களுள் ஒருவரான T. S. K. ரமேஷும் மிகுந்த உதவியாக இருந்தார்கள்.

இந்த ஜீயர் ஸ்வாமிகள் தனது ஆசார்யரான சின்னக் கலியன் ஸ்வாமிகளைப் போல் இருங்கடல் தொடங்கி இடமுடைவதரி வரை சென்று, ஆங்காங்கங்குள்ள ஐம்பதாண்டு காலமாக ஸ்ரீவானமாமலை ஸ்வாமியை சேவிக்காமல் வாடிய சிஷ்யர்களுக்கு அருள் மழை பொழிந்து ஸ்ரீவைஷ்ண தர்சனத்தை விளங்கச் செய்தார். மேலும், வடக்கே உள்ள சிஷ்யர்களின் ப்ரார்த்தனையை திருமேனி தளர்ச்சியினால் நிறைவேற்ற முடியாமையால் ஸ்வாமி விரைவாக 20—7—83 அன்று ஸ்வஸ்தானம் திரும்பினார்.

*ஸ்ரீஸ்வாமி செய்தருளிய கைங்கர்யங்கள்:*

1) ஸ்ரீவானமாமலைப் பெருமாள் கோவிலில் இராஜ கோபுரத் திருப்பணியை ரூபாய் ஆறு லட்சம் செலவில் செய்வித்தருளினார்.

2) பெருமாள், தாயார் கோவில் விமானங்களையும் புதுப்பித்து ஜீரணோத்தாரணம் செய்தருளினார்.

3) தஞ்சாவூர் மாவட்டம் மன்னார்குடியில் வானமாமலை மடத்தின் கிளையாகப் புதுமடம் ஒன்றைக் கட்டி அருளினார்.

4) இராமநாதபுரம் மாவட்டம் முதுகுளத்தூர் தாலுகா கொத்தங்குளத்தில் உள்ள சுந்தரராஜப் பெருமாள் சந்நிதியைப் புதுப்பித்து 1982 பிப்ரவரி மாதம் சம்ப்ரோக்ஷணம் செய்தருளினார். (9)

## இருபத்தொன்பதாவது: ஸ்ரீபட்டர் பிரான் ராமாநுஜ ஸ்வாமி

ஸ்ரீபட்டர்பிரான் ஸ்வாமி 1921–ஆம் ஆண்டு நல்லார் நவில்குருகூர் நகரான ஆழ்வார்திருநகரியில் அபிமானதுங்கன் செல்வனைப் போல திருமாலுக்குப் பழவடியரான ஸ்ரீவைஷ்ண குலத்தில் அவதரித்தார். உரிய காலத்தில் உபநயநம் முதலான ஸம்ஸ்காரங்களைச் செய்யப்பெற்று, உபய வேதங்களையும் ஸ்ரீகாஞ்சீபுரத்தில் ஸ்ரீ.உ.வே பிரதிவாதியயங்கரம் அண்ணங்கராசாரியார் ஸ்வாமியின் பாடசாலையில் அதிகரித்து, அவருடைய விசேஷகடாக்ஷத்திற்கு உரியர் ஆனார். பின்னர் திருக்குருகூருக்கு எழுந்தருளி, பரம்பரையாக வரும் ஆழ்வார்திருநகரி ஸ்ரீவானமாமலை மடத்தின் ஸ்ரீகார்யமாகவும், ஆதிநாதர் ஆழ்வார் சந்நிதி தீர்த்தக்காரராகவும் எழுந்தருளியிருந்தார். இருபத்தைந்தாவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீசின்னக் கலியன் ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியை ஆச்ரயித்து, பஞ்சஸம்ஸ்காராதிகளைப் பெற்ற. இவர் இருபத்தேழாவது பட்டத்து ஸ்வாமியான சின்னராமாநுஜ ஜீயர் ஸ்வாமியின் விசேஷகடாக்ஷம் பெற்று, அவரால் ஆஸ்தானத்திற்கு ஆமுதல்வன் இவன் என்றும் மங்களாசாஸனம் பெற்றவர். சமதமாதிகுணங்களில் சிறந்தவராய் வைராக்யசாலியாய் ஸ்ரீசுந்தரராஜ அய்யங்கார் என்ற திருநாமத்தோடு எழுந்தருளியிருக்கும் இவரை இருபத்தெட்டாவது பட்டம் ஸ்ரீசின்ன சடகோப ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி, தமது திருமேனி தளர்ச்சி கருதி ஸ்ரீவரமங்கை நாச்சியார் ஸ்ரீதெய்வநாயகன் கைங்கர்யம் இடையீடின்றி நடைபெற, தமக்குப்பின் வாரிசாகக் கருதி 8-3-1989 அன்று இளவரசுப் பட்டமாக நியமித்தருளினார்.

சின்னசடகோப ராமாநுஜஸ்வாமி 13-8-1989ஆம் நாளில் திருநாடு அலங்கரித்தருளினார். இந்த வர்த்தமான ஸ்வாமி ஸ்ரீபட்டர் பிரான் ராமாநுஜ ஜீயர் என்ற திருப்பெயருடன் 27—8—1989 அன்று ஸ்ரீவானமாமலை மடத்தின் 29-ஆவது பட்டமாகப் பொறுப்பேற்றருளினார்கள்.

இந்த ஸ்வாமி, தமக்கு முந்தைய இருபத்தெட்டு ஆசார்யர்கள் செய்து வந்த கைங்கர்யங்களை மிக்க

ஆர்வத்துடன் நடத்திவருகிறார்கள். இவருடைய பணிகள் சிறந்து விளங்கவும், ராமாநுஜ தாசநம் தனது முழுமை யான வெற்றியை அடையவும், ஆழ்வார்களையும், ஆண் டாளையும், எம்பெருமானாரையும், பெரிய ஜீயரையும் பிரார்த்திக்கிறேன். ஸ்ரீபட்டர்பிரான் ராமாநுஜ ஸ்வாமி தேகஆரோக்ய திடகாத்திரத்தோடு நீண்ட காலம் வைஷ் ணவப் பணியாற்ற ஸ்ரீவரமங்கைத் தாயார் உடனுறை ஸ்ரீதெய்வநாயகனாகிய திவ்ய தம்பதிகளை ஸதா சேவித் துக்கொண்டு பிரார்த்திக்கிறேன்.

## முடிவுரை:

ஓராண் வழியாய் வரும் ஸ்ரீவானமாமலை மடத்துக் குருபரம்பரை வானமாமலையிலும், பாரத தேசத்திலுள்ள பெரும்பாலான இடங்களிலும் கைங்கர்யங்களையும், திருப் பணிகளையும், நூல் வெளியீடுகளையும் செய்து வருகிறது

இவ்வாறு பரம்பரை பரம்பரையாக நியமிக்கப்பட்டு ராமாநுஜன என்னும் திருநாமத்தோடு. துறவிகளாய். இன்றளவும் பகவத கைங்கர்யம், பாகவத கைங்கர்யம், தர்சந நிர்வாகம் ஆகியவைகளைச்செய்து கொண்டு வரும் நிலை எல்லோராலும் அறியப்பட்டதொன்று.

மற்றைய திவ்ய தேசங்களில் சில சந்நிதிகளின் நிருவாகத்தையும் மேற்கொண்டு பல திவ்ய தேசங்களில் திருத்தேர்கள், திருப்பல்லக்குகள், வாகனங்கள், மண்டபப் பிராகாரங்கள், திவ்யாபரணங்கள், பீதாம்பரங்கள் முதலிய வற்றைச் செய்தருளியும், வெள்ளியாலும், தங்கத்தாலும் ஆன பொருட்களை எம்பெருமான்களுக்கு ஸமர்ப்பித்தும், பல திவ்ய தேசங்களில் மடங்களை ஸ்தாபித்தும், திருமா லடியார்களைச் சிறப்பாக ஆதரித்தும் இருந்து வருவது அனைவருக்கும் தெரிந்த செய்திகளாகும்.

எம்பெருமானார் முதல் இன்றளவும் வந்துள்ள ஆசார்யபரம்பரை மேலும்வளர்ந்து, எம்பெருமான், தாயார் திருவருளைப் பெற்றுக் கோவிலையும், மடத்தையும் எம் பெருமானாருடைய தர்சனத்தை நிர்வகிக்கவும் நாம் செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலை வழிபடுவ தல்லால் வேறொரு புகலில்லை.

சுபமஸ்து.

ஆழ்வார், எம்பெருமானார், ஜீயர் திருவடிகளே சரணம்!
ஜீயர் திருவடிகளே சரணம்!

